# கல்கி

KALKI 11.8.96
ரூ. 3.00



"சட்டத்தின் பிடியிலிருந்து தப்ப முடியாது!"

## "வேண்டாம் திருமணம்!"

விந்தியாசமாய்ச் சிந்திக்கும் பெண்கள்

— வித்தியாசமாய்ச் சிந்திக்கும் பெண்கள்



## பினாமி பெயரில் ஆம்னி பஸ்கள்!

— அமைச்சர் கூறுகிறார்!

# தலைமறைவு வாழ்க்கையில் அரும்பிய காதல்!

• உமாநாத்



“தலைசிவி விடக்கூட யாருமில்லாமல் கையில் எண்ணெய்க் கிண்ணத்தையும் சீப்பையும் எடுத்துக் கொண்டு வீடு வீடாக ஏறி இறங்குகிறேன், அம்மா" என்று பெரிய பெண்ணிடமிருந்து கடிதம் வரும். அப்போதெல்லாம் கிடந்து மனம் சங்கடப்படத்தான் செய்யும்..." என்று சீன ஆக்கிரமிப்பு நேரத்தில் (அறுபதுகளின் தொடக்கத்தில்) சிறையிலிருந்த காலங்களை நினைவுகூர்கிறார் பாப்பா உமாநாத்.



"எங்கள் நாற்பத்து நாலு வருஷத் திருமண வாழ்க்கையில் எங்களிடையே ஒரு சின்ன மனவருத்தம் கூட ஏற்படவில்லை..."



கணவர் உமாநாத்தும் சிறையில். மூன்று பெண் குழந்தைகள் தனியாக எப்படி வாழ முடியும்? இக்கற்ற நிலையிலிருந்த அந்தக் குழந்தைகளில் மூத்த பெண் ஒரு சமயம், காவல் துறை அதிகாரிகளையே தொலைபேசியில் அழைத்து, 'அம்மா என்ன தப்புப் பண்ணினார்? திருடினாரா, கொள்ளையடித்தாரா? உடனே அனுப்புங்கள். எங்களுக்குத் தலைசிவி விட அம்மா வேண்டும்' என்று கேட்டதாம்.

ஏறத்தாழ நாலரை ஆண்டுகள் சிறைவாசம் அனுபவித்து

• பாப்பா உமாநாத்



''பையனை ஏன் கோபமா அடிக்கிறீங்க?

''என்ன அநியாயம்... பம்பரம் விளையாடணும்னு அடம்பிடிக்கிறான் சார்....''

''சின்ன வயசுல இது சஜகம்தானே... இதுக்கு ஏன் அடிக்கணும்?''

''அடுத்த வீட்டுப் பொண்ணு தொப்புளில் விடணும்னு அடம்பிடிக்கிறான் சார்...''

— திருத்துறைப்பூண்டி எஸ். கந்தசாமி

இருக்கிறார் பாப்பா உமாநாத். இவற்றின் உச்சம் ஐம்பதுகளின் தொடக்கத்தில். பல்லாவரத்தில் தலைமறைவு வாழ்க்கை. பாப்பா, அவருடைய தாய் லட்சமி அம்மாள், உமாநாத், கல்யாணசுந்தரம், அனந்தன் நம்பியார், ராமமூர்த்தி எல்லோரும் இருந்தார்கள். ராமமூர்த்தி, தமது கால் ஊனம் போலீஸாருக்குக் காட்டிக் கொடுத்துவிடும் என்பதால், பஞ்சகச்சம் வைத்து வேட்டி கட்டிக் கொண்டு சைக்கிளில் பின்னால் அமர்ந்து போவார். நம்பியார் பட்டை பட்டையாக நாமம் போட்டுக் கொண்டு போவார். அப்படியிருந்தும் அனைவரும் பிடிபட்டு விட்டார்கள்.

சென்னை மத்தியச் சிறையில், பாப்பா 'ஒண்ணாம் நெம்பர்' அறையில்; அம்மா நாலாம் நெம்பர் அறையில். பாப்பாவுக்கு இருபத்து நாலு மணி நேரமும் கைவிலங்கு!

''என் தாயார் லெட்சுமி அம்மாளை அடித்தே கொன்று விட்டு, தற்கொலை என்று ஜோடித்து விட்டார்கள். சிறைக்குள்ளேயே செத்த முதல் பெண் என் அம்மாதான்!'' என்கிறார் பாப்பா உமாநாத்.

கொடுமை அத்துடன் முடியவில்லையாம். லெட்சுமியம்மாள் மரணம் பற்றி அறிந்த அமைச்சர் மாதவமேனன் சிறைச்சாலைக்கு வந்தார். ''அவரிடம் செத்துப் போன என் அம்மாவைப் பார்க்க வேண்டும் என்று அனுமதி கேட்டேன். 'கம்யூனிஸ்ட் கட்சியிலிருந்து விலகுகிறேன் என்று எழுதிக் கொடு. அனுமதிக்கிறேன்' என்றார் அந்த அமைச்சர். ஒன்பது வயதுச் சிறுமியாக இயக்கத்திற்கு வந்த நான் அதற்கு ஒப்பவில்லை. உட்கார்ந்த நிலையிலேயே செத்துப் போன அம்மாவை, சிவப்புக் கரை போட்ட ஜெயில் போர்வையில் மூட்டையாகக் கட்டித் தூக்கிக் கொண்டு போனதை மட்டுமே என்னால் பார்க்க முடிந்தது. அப்போது எனக்குப் பத்தொன்பது வயது. அம்மாவை எரித்தார்களா, புதைத்தார்களா என்பது கூட எனக்குத் தெரியாது. பின்னால் அண்ணா முதலமைச்சரான பிறகு, இதுபற்றி விசாரித்து எங்கே புதைத்து – அல்லது எரித்தார்கள் என்று அறிய முயற்சி எடுத்தார். கண்டுபிடிக்க முடியவில்லை!

**ப**ல்லாவரம் தலைமறைவு வாழ்க்கையின் போதுதான் பாப்பா – உமாநாத் காதல் அரும்பியது. தாங்கள் திருமணம் செய்து கொள்ள விரும்பும் செய்தியை கல்யாணசுந்தரத்திடம் மட்டும் சொன்னார்களாம். ''சிறை வாழ்க்கை ஒருவழியாய் முடிந்து, தோழர்கள் அனைவருமே விடுதலை பெற்று வெளியே வந்த பின்னர்தான் திருமணம் செய்து கொள்வது என்று முடிவு செய்திருந்தோம். அதன்படியே 1952-ல் பிரபல தொழிற்சங்கத் தலைவர் சர்க்கரைச் செட்டியார் தலைமையில், பொன்மலையில் ஒரு தொழிற்சங்க மாநாடு மாதிரியே எங்கள் திருமணம் நடைபெற்றது. பெரியாரும் வந்திருந்தார். தாலி அணிந்து கொள்ளவில்லை. இது பற்றிக் கேட்டவர்களிடம் 'பாப்பாவுக்கு நான் தாலி கட்டுவதாயிருந்தால், அவர் எனக்குத் தாலி கட்ட வேண்டும்' என்றார் உமாநாத். மிகவும் வற்புறுத்தியதன் பேரில் தோழர்கள் தந்த மோதிரம் மட்டும் அணிந்து கொண்டோம்.

''ரெயில்வே தொழிற்சாலையின் தொழிலாளத் தோழர்கள் அண்டா, குண்டா முதல் கட்டில், மெத்தை என்று அவசியமான எல்லாச் சீர்வரிசைகளையும் வழங்கினார்கள்!'' என்று கூறும் பாப்பா உமாநாத், ''எங்கள் நாற்பத்து நாலு வருஷத் திருமண வாழ்க்கையில் எங்களிடையே ஒரு சின்ன மனவருத்தம் கூட ஏற்பட்டதில்லை...'' என்று அழுத்தமான மனநிறைவோடு சொல்லிப் பெருமைப்படுகிறார்.

**வ**ங்கப் பஞ்சம் வந்தபோது, இவரே முயற்சி எடுத்து, மற்ற குழந்தைகளை அழைத்துக் கொண்டு, வீடு வீடாகப் போய்க் கும்மியடித்துப் பாட்டுப் பாடி உடைகள், மருந்து தவிர ரொக்கமாகவும் வசூலித்து அனுப்பிய தொகை ரூபாய் இருபத்தைந்தாயிரம்! பத்தாவது

வயதில் ஒத்துழையாமை இயக்க நேரத்தில் கல்யாணசுந்தரம் போன்ற தலைவர்கள் போராடிச் சிறை சென்ற போது, பாப்பாவையும் பிடித்திருக்கிறார்கள். சின்னப் பெண் என்று விட்டு விட்டார்களாம். அதில் மிகவும் வருத்தம் இவருக்கு.

"இரண்டாம் உலகப் போரின் போது, தலைவர்களைக் காட்டிக் கொடுக்க மறுத்து, ஹிட்லரின் ஆட்களால் படுகொலை செய்யப்பட்ட சோவியத் வீராங்கனை தான்யா, என்னிடம் அதிகப் பாதிப்பை ஏற்படுத்தி விட்டார். எனது மேடை அறிமுகம் முதலில் பாட்டுப் பாடுவதிலேயே தொடங்கியது. பாரதியார், பாரதிதாசன், நாமக்கல்லார் இவர்களின் எழுச்சியூட்டும் பாடல்கள். வழக்கமாகப் பதினேழு வயது ஆனால்தான் கட்சியில் சேர்த்துக் கொண்டு, 'சிவப்பு அட்டை' தருவார்கள். ஆனால் விதிவிலக்காக எனக்குப் பதினைந்து வயதிலேயே அந்த வாய்ப்புத் தரப்பட்டது. அதில் எனக்கு மிகப் பெரிய மகிழ்ச்சி. லெனின் இறந்தபோது, 'ஒரு கம்யூனிஸ்ட் என்பதை விட மேலான கௌரவம் உலகத்தில் வேறு எதுவும் இல்லை' என்று ஸ்டாலின் சொன்னார். இந்த வாசகம் எனக்கு மிகவும் பிடித்தமானது என்பதால் 'ஆட்டோகிராப்' கேட்பவர்களுக்கு இதையே எழுதித் தருகிறேன்!" என்று பெருமையோடு கூறும் பாப்பா உமாநாத்துக்கு, கைக்குழந்தையை இடுப்பில் வைத்துக் கொண்டு பொதுக் கூட்டங்கள் பேசிய அனுபவங்களும் ஏராளம்.

இன்றைக்கு, பிரேமானந்தா விவகாரம், பத்மினி, வாச்சாத்தி என்று பெண்களிடையே விழிப்புணர்வு ஏற்பட்டு, அதிகார வர்க்கத்தை ஒரு கை பார்க்கலாம் என்கிற நிலை உருவானதற்கு முக்கியமான காரணம், கட்சி சார்பற்று இயங்குகிற அனைத்திந்திய ஜனநாயக மாதர் சங்கம்தான். இருபத்து மூன்று ஆண்டுகளுக்கு முன்னால் பாப்பா உமாநாத்தை பொதுச் செயலாளராகவும் கே.பி. ஜானகியைத் தலைவராகவும் கொண்டு தொடங்கப்பட்டதுதான் இது. அப்போது 'ஜனநாயக மாதர் சங்கம்' என்றுதான் பெயர். அனைத்திந்திய அளவிலான போது, அதன் தமிழக கிளையாகச் செயல்பட ஆரம்பித்தது. இப்போது தமிழகம் முழுவதுமாகக் கிளைபரப்பி, 2,80,000 உறுப்பினர்களோடு மிகவும் ஆரோக்கியமான ஆக்கப்பணியில் ஈடுபட்டுக் கொண்டிருக்கிறது. அதுபற்றிப் பேசும்போது, "எங்களிடம் திறமையான ஆயிரம் நல்ல ஊழியர்கள் இருக்கிறார்கள்" என்று பெருமையோடு சொல்கிறார் பாப்பா உமாநாத்!

- சுப்ர.பாலன்

வண்ணப்படம் : யோகா



# கோடம்பாக்கத்துக்கு வந்த ஹாலிவுட்!

"கோடம்பாக்கத்துல குடித்தனம் இருக்கறதை நினைச்சுப் புல்லரிக்குதுப்பா!" என்றான் தண்டபாணி.

"சொல்லு சொல்லு!" என்றேன் ஆர்வக் கொந்தளிப்புடன்.

"ஹாலிவுட்டுல படம் எடுத்து, போரடிச்சுப் போயி, வெள்ளைக்காரங்க எல்லாம் இங்க வந்து வாஹினியிலே முகாம் போட்டிருக்காங்க.



• 'INFERNO' - படத்தில் ஒரு காட்சி

• தீப்தி பட்நாகர்

வா, வந்துபாரு!" என்று என் கையைப் பிடித்து, தரதரவென இழுத்துப் போனான்.

"சே! டூரிஸ்டா இருப்பாங்க தண்டபாணி. பாக்கட் சைஸ் வீடியோ காமராவோட இருந்தா, உடனே நீயா ஒரு ரூட் பிடிச்சி, நூல் உட்டுடறதா?" என்றேன் கடுப்பாக.

"நம்பலை இல்லை? அதோ பார்!" என்றான்.

"அட, இந்த ஆளை எங்கேயோ பார்த்திருக்கேனே?" என்று கட்டை குட்டையாக மழுங்கென்றிருந்த ஒரு வெள்ளையனைக் காட்டிக் கேட்டேன் த. பாணியிடம்.

"மொழி புரியாம எத்தனை இங்கிலீஷ் படம் பார்த்திருக்கே? அந்த மூஞ்சிங்களிலே ரொம்ப முக்கியமான மூஞ்சி. டான் வில்ஸன்னு பேரு. நம்ம அர்ஜுன் மாதிரி அங்கத்திய ஆக்ஷன் ஹீரோ."

"என்னவாம் இங்கே?"

"சொன்னேனில்லை? 'Inferno'ன்னு இங்கிலீஷ் படம். ஒரு இன்டர்போல் ஆசாமி, கொலைகார வில்லனைத் தேடிட்டு மெட்ராஸ் தப்புப்பா... சென்னைக்கு வரான், அமெரிக்காவிலேருந்து. இங்க

அவன் நடத்தற சாகசமும் ஒரு பெண்ணைப் பார்த்ததும் மயங்கி, காதல் கொண்டு..."

"ஸ்டாப்... ஸ்டாப். கதையை விடு. எந்தக் கன்னித்தமிழ்க் கதாநாயகிக்கு அந்தப் பாக்கியம் கிடைச்சிருக்காம்?"

"சாரி. தமிழ் இல்லை. இந்தி!" என்று தூரத்தில் கொலுவிருந்த ஒரு பாப்பாவைச் சுட்டிக் காட்டினான் தண்டபாணி.

"அட, இதையும் பார்த்தாப்பல இருக்கே?"

"மங்கை இவன் கூந்தல்தனில் தென்றல் வீசிடும் ராகா ராகா ராகா" என்று தண்டபாணி பாடவும், "அட, தீப்தி பட்நாகர்!" என்றேன் உ. வசப்பட்டு.

"இப்பவாச்சும் நம்பறியா? அசோக் அமிர்தராஜ் படம். முச்சூடும் சென்னையிலயே எடுத்து, ஹாலிவுட்டிலே ரிலீஸ்."

"சே, என்ன ஒரு புரட்சி!" என்றேன்.

"இது புரட்சி இல்லை. புதுமைதான். புரட்சியை வேற ஒருத்தர் செஞ்சிருக்கார்."

"யாராம்?"

**'எனக்கொரு மகன் பிறப்பான்' - குஷ்பு - ராம்கி**

"கேயார். தெரியுமில்லை? சினிமா ஸ்டிரைக்கெல்லாம் நடந்து முடிஞ்சி, ஜூன் பதினஞ்சுக்கப்புறம் ஆரம்பிச்சி ஆகஸ்டுலேயே ஒரு படம் வுடப் போறார்! எனக்கொரு மகன் பிறப்பான்."

"கண்டிப்பா கல்யாணமாகி, மகனும் பிறப்பான். விஷயத்தைச் சொல்லு. என்ன படம்?"

"அதான் கிஷ்டா டைட்டில். 'எனக்கொரு மகன் பிறப்பான்'னு ஹீரோ ராம்கி காத்துட்டு இருக்க, மகன் பிறந்து வைக்க, அப்புறம் பையனா இருந்தா என்ன, பெண்ணா இருந்தா என்னன்னு நீதி சொல்லி முடிப்பாங்க போல. ஆனா பயங்கர காமெடி படமாம்.


* திவ்யா ஹீரோத்கர்

வரிசையா ராம்கி - குஷ்பு ஜோடிப் படங்களெல்லாம் ஹிட் ஆயிட்டே வர்றதுனால இதுலயும் அதே!"

"குஷ்புன்னதும் ஞாபகம் வருது. அவங்களோட ஆரம்ப கால கவர்ச்சி போட்டோ ஒன்னை, ஒரு பத்திரிகை சமீபத்துல பப்ளிஷ்

# யுத்தச் சூழலில் எங்கள் பிரதேசம்...



துப்பாக்கி
நெருப்புகளைக் கக்கியதால்
குருடாய்ப் போனது இந்த இரா.

அதோ!
மரணிக்கும் ஜீவனொன்றின்
அவலக்குரல் ஜனனிக்கிறது!

அண்டையிலுள்ள கடைக்குப்போன
மகனைத் தேடி
அப்பன் ஓடுகிறான்.

தாலியைத் தேடி
தாரம் பதறும்
மற்றொரு புறம்.

இறுக்கிக் கட்டமுடியாத
எங்கள் படலை
இழுத்துச் சாத்தி
இருட்டு மூலைக்குள்
குந்திக் கொள்வோம்.

எங்கள் வீதியின் பாதியில்
துப்பாக்கிகள் வெடிக்கும்

பின்புறத்து
வேலியை பொத்துக் கொண்டு
ஈர்க்குக் குத்த;
உடைந்த கண்ணாடித் துண்டுகள்
பாதத்தை வெட்ட;
நெருஞ்சி முட்கள் குத்த
புகுந்து ஓடுவோம்
அயல் வீடுகளுக்கு
நிசப்தங்களோடுதான்!

பாதியுணவு
வாயிலிருக்கும் வேளை
வேலிக்குள்
ஓணான் சரசரத்தால் கூட
ஓடி ஒளிந்து கொள்வோம்
குறை வயிற்றுடன்
அரை மனிதனாய்!

இப்படி இந்த இரா
விமோசனம் பெறும்வரை
நாய்களாய்த்தான்...
புகுந்தும், கிழிந்தும்
ஓடியும் திரிந்தோம்
குரைப்புகளில்லாதுதான்!

- நானா ஷியாம்
மருதமுனை, இலங்கை.

பண்ணினதுல ரொம்ப அப்செட் ஆகிட்டாங்கன்னு கேள்விப்பட்டேன்.. ஊர்வசிக்கு குடும்ப நாயகி இமேஜ் வந்துட்ட அப்புறம், இப்படியொரு படத்தை இப்பப் போட்டுட்டாங்களேன்னு ரொம்ப வருத்தப்பட்டாங்களாம்! அந்தப் பத்திரிகையிலேயே செய்தி வந்ததே. மறுவாரம்?"

"நீ வேற! நானே அவங்ககிட்டே இதைக் கேட்டு பேஜாராயிட்டேன். போய்க் கேட்டு வெக்காதே. அதெல்லாம் புருடா. 'எனக்கொண்ணும் கவலை இல்லை. நான் குடுத்த போஸ்தானே அது'ன்னு ரொம்ப கூலா சொல்லிட்டுப் போயிட்டாங்க."

"குஷ்பு பார்த்தாராமா அதை?"

"இதானே வேணாங்கறது? குஷ்பு இப்ப முன்னை மாதிரி இல்லை. 'பர்சனல் விஷயம் எதையும் பேச வேணாமே'ன்னு கட் அண்ட் ரைட்டா சொல்லிட்டுத் தான் மறுவேலை."

"நல்லா இருந்தா சரி."

"நாடு நல்லா இருக்கணும்னா அரசியல்வாதிங்க நாட்டை ஆளக்கூடாது. அதிகாரிகள் கண்ட்ரோல்ல தான் அரசியல்வாதிங்க இயங்கணும்!"

நான் தண்டபாணியை உற்றுப் பார்த்தேன்.

"நல்லாத்தானே இருந்த, தண்டபாணி?"

"இப்பவும் நல்லாத்தான் இருக்கேன்."

"திடீர்னு ஏதோ பொன்மொழி உதிர்த்தாப்பல இருந்தது?"

"நீ வேற. ஆர்.கே. செல்வமணியோட 'அரசியல்' படத்துக் கதை இதுதான்."

"தண்டபாணி உன்னை கெஞ்சிக் கேட்டுக்கறேன். சினிமாக் கதை சொல்லி என்னை இம்சை பண்ணாதே. ஏற்கெனவே எனக்கு டஸ்ட் அலர்ஜி."

"இது அந்த வகையறா இல்லைய்யா. மக்கள் ஆட்சியில பிடிச்ச இடத்தை மறுபடி பிடிக்கணும்னு மும்முரமா இருக்காராம் செல்வமணி."

"மம்முட்டி ஹீரோவா?"

"ஆமாம்."

"லியாகத் அலிகான் வசனமா?"

"ஆமாம்."

"ரோஜா ஹீரோயின், அதானே?"

"மாட்டிக்கினியா? ரோஜா இல்லை. ஷில்பா."

"ஷெட்டியா?"

"இல்லை. இது வேற பாப்பா. ஷில்பா ஷிரோத்கர்னு இன்னொரு பம்பாய் முகம். ஊர்மிளாவுக்குப் போட்டியா வரக்கூடிய நட்சத்திரம்னு பம்பாய் பத்திரிகைகள் வரிஞ்சி கட்டிக்கிட்டு எழுதிட்டு இருக்காங்க."

"ஐயோ, இன்னொரு கவர்ச்சிப் புயலா?"

"கேளு. பிரமாதமான டான்ஸராம். அம்மணி. அவங்க ஆடிட்டிருந்தா, நாமெல்லாம் பார்த்துட்டே இருக்கலாம்னு சொல்றான் ஒரு யூனிட் ஆளு."

"என்னது? பரதநாட்டியமா?"

"ஆமாம்! பரதநாட்டியம், கதக்களி, குறக்களி, உன்கிட்டப் போயி சொல்ல வந்தேனே. என்னை ஜோட்டால அடிக்கணும்!"

— கிச்சா

# சுஜாதா பக்கம்



சட்டசபையில் நிதி நிலை அறிக்கைப் பேச்சில் தமிழக முதல்வர் 'மாச்சரியம்' என்ற சொல்லைப் பயன்படுத்தினார். மாச்சரியம் என்றால் பொறாமை, காமம், குரோதம், லோபம் போன்ற ஆறு தீமைகளில் ஒன்றான அது, எப்போதும் மதமாச்சரியம் என்று ஜோடி சேர்க்கப்படும். இந்த வடமொழிச் சொல் உபதேசரத்தின மாலைக் காலத்திலிருந்து (சுமார் 14-ம் நூற்றாண்டு) தமிழில் பழகி வருகிறது. அழுக்காறு, பொறாமை என்கிற வார்த்தைகளுக்கு இடைப்பட்ட ஓர் அர்த்தம் தொனிப்பதால் இந்த வார்த்தையை முதல்வர் பயன்படுத்தியதில் ஆச்சரியம் இல்லை.

அதே தருணத்தில் முதல்வர் இனி மதறாஸ் என்று பெயரை மாற்றி எல்லா மொழிகளிலும் மாநிலத் தலைநகரை சென்னை என்றே அழைப்போம் என அறிவித்திருக்கிறார். பம்பாயை மும்பாய் என்று மாற்றியது போல் மதறாஸை சென்னை என்ற அதன் பழைய பெயருக்கு மாற்றுவதில் தப்பில்லை. மதறாஸுக்கு விடை கொடுக்கு முன், அந்தப் பெயர் எப்படி வந்தது என்று பழைய ரிக்கார்டுகளை புரட்டிப் பார்த்தால் முதலில் சென் ஜார்ஜ் கோட்டை இருந்த இடத்திற்கு சென்னப் பட்டணம் என்றுதான் பெயர் இருந்திருக்கிறது. செங்கல்பட்டு நாயக், தந்தையின் நினைவாக வைத்த பெயர். மதறாஸ் பட்டணம் என்பது சென்னப்பட்டணத்திற்கு வடக்கே இருந்த பகுதிகளுக்குப் பெயராக இருந்தது. விஜயநகரத்திலும் கோல்கொண்டாவிலும் முறையே 1645, 1672-ம் ஆண்டுகளில் மதறாஸ் பட்டணத்தைப் பற்றிய குறிப்புக்கள் உள்ளன. ஆங்கிலேயர்கள் தங்கிய இடம் முதலில் ஜார்ஜ் கோட்டையாக இருந்தாலும் இரண்டு பட்டணங்களும் கட்டடங்களின் தொடர்ச்சியால் இணைந்த போது 'மதறாஸ் பட்டணம்' என்கிற பெயரையே வெள்ளைக்காரர்கள் பயன்படுத்தினார்கள். இந்தியர்களிடம் சென்னப்பட்டணம் என்பதே வழங்கி வந்தது.

மதறாஸ் என்ற பெயர் பற்றி பல ஆராய்ச்சிகள் உள்ளன. மதர்ஸா என்கிற உருது வார்த்தை (பள்ளி)யிலிருந்து வந்தது, அல்லது மதராஜபட்டணம் என்கிற சம்ஸ்க்ருத வார்த்தையிலிருந்தோ மாதராஸு எனும் கன்னட வார்த்தையிலிருந்தோ என்று பல குறிப்புக்களைப் பார்க்கிறேன். மாத்ரா என்கிற போர்த்துகீசிய குடும்பத்தின் பெயரா அல்லது மாத்ரே மாத்ரெஸ் என்கிற போர்த்துகீசிய வார்த்தையா (தாயைக் குறிப்பிடுபவை) அல்லது மதிரா (மரம்) என்ற மறுபடி போர்த்துகீசிய வார்த்தையிலிருந்து வந்திருக்கலாமா என்றெல்லாம் பலவித ஆராய்ச்சிகள் உள்ளன.

ஜூலை 1927-ல் ரெவரண்ட் டிக்ஸிரா என்பவர் எழுதிய ஒரு கட்டுரையில் மைலாப்பூர் லாசரஸ் தேவாலயத்துக்காகத் தோண்டிக் கொண்டிருக்கும் போது ஒரு கல்லறை வாசகம் போர்த்துகீசிய மொழியில் எழுதியிருந்ததைக் கண்டார்களாம். அதன் அர்த்தம்: இது மான்யுவெல் மாத்ராவினுடையதும் அவரா அன்னையினுடையதுமான கல்லறை. வின்சென்ட் மத்ரா, லூசி ப்ரேக் இவர்களின் மகன். அவர்கள் 1637-ல் இந்த தேவாலயத்தைக் கட்டினார்கள்.

ஆக மதறாஸ் என்பது தேவாலயம் கட்டிய ஒரு போர்த்துகீசிய குடும்பத்தின் பெயரிலிருந்து வந்திருக்கலாம் என்றும் தெரிகிறது. மத்ராவின் தந்தையின் கல்லறையை இன்னம் தேடிக் கொண்டிருக்கிறார்கள். அது கிடைத்தால் இதன் பெயர் போர்த்துகீசிய குடும்பத்தின் நினைவாக வைக்கப்பட்டது என்பது ஊர்ஜிதமாகும்.

பேட்டைகளின் பெயர்கள் தமிழ்நாக்கின் வசதிக்கேற்ப மாறுவது சென்னையில் கண்கூடு. ஹாமில்டன் வாராவதி, அம்பட்டன் வாராவதியாகி, மீண்டும் பார்பர்ஸ் ப்ரிட்ஜ்ஆனது. உகலிலேயே ஒரு வினோதமான உதாரணம் 17ம் நூற்றாண்டில் பேல் என்னும் கவர்னர் துரை பல நெசவாளிகளை நைனியப்ப நாயக்கன் தெருவில் குடிபுக வைத்தார். துணி துவைப்பவர்களைத் தங்கசாலைக்குக் குடிபுக வைத்தாராம். பெத்தநாயக்கன் பேட்டைக்கு வெளியே இருந்த இந்தப் பகுதிகள் விரிவடைந்த போது, அப்போதைய கவர்னர் ஜோசப் காலெட் பல நெசவாளிகளை திருவொற்றியூர் அருகில் ஒரு பேட்டையை அமைத்து இடம் பெயர்த்தார். புதிய இடத்திற்கு தன் பெயரைச் சூட்ட விரும்பி காலெட் பேட்டா என்று பெயரிட்டார். அதன் தற்போதைய பெயர் காலாடிப்பேட்டை. இது போல் கொலைகாரன் பேட்டையும் ஏதாவது உபத்திரவமில்லாத கவர்னர் பெயரின் எளிய வடிவமாகத்தான் இருக்க வேண்டும். இப்படி சென்னையில் எல்லா பேட்டைகளுக்கும் சின்னதாக ஒரு சரித்திரம் உண்டு.

நீ போர்த்துகீசிய வார்த்தையோ, உருதுவோ, சம்ஸ்க்ருதமோ, கன்னடமோ, விடை பெறு மதறாஸே! நல்வரவு சென்னையே!

*(மீண்டும் அடுத்த வாரம்)*

# களத்தில் கல்கி :

## உள்ளாட்சித்துறை அமைச்சருடன் ஓர் அதிரடி விசிட் - சென்ற வாரத் தொடர்ச்சி.....

**சென்னையை ஒட்டியுள்ள சில புறநகர்ப் பகுதிகளுக்குக் காலையில் திடீர் விசிட் செய்த அமைச்சர், மாலையில் சம்பந்தப்பட்ட அதிகாரிகளை அழைத்துப் பேசினார்....**

"நீங்கள் உட்காருவதற்கென்றே போடப் பட்டிருக்கும் ரிவால்விங் சேரில் உட்காராமல், உங்களைப் பார்க்க வருகிற விசிட்டர்கள் உட் காரும் நாற்காலிகள் ஒன்றில் உட்கார வேண் டிய அவசியம் என்ன?" என்று கேட்டோம் ஊரக வளர்ச்சி மற்றும் உள்ளாட்சித் துறை அமைச்சர் கோ. சி. மணியிடம்.

"அதில் உட்காருவது ரொம்பவும் ஆடம்பர மாகப்படுகிறது எனக்கு!" என்று காஷுவலாகச் சொன்னபடியே, தாம் படித்துக் கொண்டிருந் ததை எங்களிடம் கொடுத்து, "எல்லாம் சரியாக இருக்கிறதா என்று பார்த்துச் சொல்லுங்கள்..." என்றார் அமைச்சர்.

அவர் கொடுத்தது, நாம் காலையில் விசிட் செய்த இடங்களில் பார்த்த பிரச்னைகளின் பட்டியல். எல்லாம் வரிசைப்படி கச்சிதமாக டைப் செய்யப்பட்டிருந்தன!

"எல்லாம் சரியாக இருக்கின்றன!" என்று சொல்லி அவரிடம் திருப்பிக் கொடுத்தபோது, "அதை உங்கள் ரெஃபரன்ஸுக்கு வைத்துக் கொள்ளுங்கள். என்னிடம் வேறு காப்பிகள் இருக்கின்றன!" என்ற அமைச்சர், வெளியிலிருந் தவர்களை உள்ளே வரச் சொன்னார்.

ஆலந்தூர் நகராட்சிக் கமிஷனர் சுதர்சன சௌத்ரி, பல்லாவரம் நகராட்சிக் கமிஷனர் பழநி, உள்ளகரம் - புழுதிவாக்கம் பேரு ராட்சியின் நிர்வாக அலுவலர் இராமமூர்த்தி ஆகியோருடன் மேலும் சில நகராட்சி அலு வலர்களும் வந்தனர். அனைவருக்கும் நம்மிடம் கொடுக்கப்பட்ட அதே பட்டியல்கள் கொடுக் கப்பட்டன.

"நகராட்சிகளிலுள்ள நீங்களெல்லாம் என்னதான் வேலை பார்க்கிறீர்கள்?" - அமைச்சர் கேட்டார் கமிஷனர்களைப் பார்த்து.

"நான் ஆலந்தூருக்கு மாற்றலாகி வந்து ஒருவாரம்தான் ஆகிறது!" என்றார் சுதர்சன சௌத்ரி. "நான் பல்லாவரத்துக்கு மாற்றலாகி வந்து பத்து நாட்கள்தான் ஆகின்றன!" என்றார் பழநி.

"அதனால் என்ன? நீங்கள் முன்பு கமிஷன ராக இருந்த நகராட்சிகளிலும் இதே பிரச்னை கள்தானே இருந்திருக்கும். இடங்கள்தான் வேறே தவிர பிரச்னைகள் ஒன்றுதானே..." என்ற அமைச்சர் தொடர்ந்தார்.

"இப்போது நான் கொடுத்திருக்கும் பிரச் னைகளின் லிஸ்டைப் பாருங்கள். இந்தப்



பிரச்னைகளைத் தீர்ப்பதற்கு நிதி ஆதாரங்கள் எதுவும் தேவையில்லை. யாருடைய அனுமதிக்காகவும் காத்திருக்கத் தேவையில்லை. அப்படியிருந்தும் ஏன் செய்யவில்லை? பல இடங்களில் குப்பைகள் கூட அள்ளப்படாமல், அவை இருந்த இடத்திலேயே கிடந்து மண்ணோடு மண்ணாக மக்கிக் கிடக்கின்றன, தெரியுமா?"

"நாங்கள் அவ்வப்போது 'மாஸ் வொர்க்' செய்து எல்லாவற்றையும் சுத்தம் செய்து கொண்டுதான் இருக்கிறோம்!" - இது கமிஷனர்கள்.

"குப்பை கூளங்களைத் தினசரி சுத்தம் செய்து கொண்டிருந்தால் அப்புறம் எதற்கு மாஸ் வொர்க் செய்ய வேண்டும்? ஆக, தினசரி சுத்தம் செய்வதில்லை என்பதை நீங்களே ஒப்புக் கொள்கிறீர்கள்.... நகராட்சிகளின் நிர்வாகம் இப்படியிருந்தால் சாதாரண ஜனங்கள் என்னதான் செய்வார்கள்? அவர்கள், உங்களைப் போன்ற அதிகாரிகளிடமும் என்னைப் போன்ற அமைச்சர்களிடமும் மாட்டிக் கொண்டு நரக வாழ்க்கை வாழ்பவர்களா இருக்கிறார்கள்? படித்தவர்களும் விஷயம் தெரிந்தவர்களும் தங்களுடைய பிரச்னைகள் பற்றி பெட்டிஷன் மேல் பெட்டிஷன் போட்டாவது காரியம் சாதித்துக் கொள்வார்கள். படிக்காத பாமரர்கள் என்ன செய்வார்கள்? அவர்களுக்குப் பிரச்னைகளை யாரிடம் எடுத்துச் சொல்வது என்பது கூடத் தெரியாது. 'கோ.சி. மணின்னு ஒரு மந்திரி இருக்கானாம்... என்ன பிரயோஜனம்?...' என்று அவர்களுக்குள் பேசிக் கொண்டு, என்மேல்தான் கோபமாக இருப்பார்கள்.....

"வீடு கட்டுகிறவன் என்ன செய்கிறான்? அவனவனும் அவனவன் வீட்டு காம்பவுண்ட் வரை சாக்கடையும் கட்டுகிறான். இப்படி ஒவ்வொரு வீட்டிலும் கட்டப்பட்டு வீதி முனைக்கு வரும் சாக்கடை நீரை இணைத்துக் கொண்டு செல்ல வேண்டியது யார் பொறுப்பு?"

"நகராட்சிகளின் வேலைதான் அது."

"நான் பார்த்த பல இடங்களில் சாக்கடை இணைப்புகளே இல்லாமல் இருக்கின்றனவே... சாக்கடை நீர் அப்படியப்படியே தேங்கிக் கிடக்கிறது.. இன்று ஞாயிற்றுக் கிழமை. போகட்டும். நாளைக்கே இந்த வேலைகளையெல்லாம்

# "சாதாரண மக்கள் நரக வாழ்க்கையா வாழவேண்டும்?"

## — அமைச்சர் கேட்கிறார்!



• அதிகாரிகளுடன் அமைச்சர்



முதன் முதலில் அமைச்சரானார். அப்போது முதலில் விவசாயத்துறைக்கும் பிறகு உள்ளாட்சித் துறைக்கும் அமைச்சராயிருந்தார். இப்போதும் உள்ளாட்சித் துறை.

1944 - ம் ஆண்டு பெரியாரின் தீவிரத் தொண்டராகத் தமது அரசியல் வாழ்க்கையைத் துவக்கியவர் அமைச்சர். பிறகு தி.மு.க. தமது பத்தொன்பதாவது வயதிலேயே ஊராட்சித் தலைவரானவர். பன்னிரண்டு ஆண்டுகாலம் எம்.எல்.சியாகப் பதவி வகித்தவர். கையில் கலைஞரின் படம் பொறித்த மோதிரம். "கலைஞரின் ஆள்' என்று அண்ணாவாலேயே பரிகாசம் செய்யப் பட்டவன் நான்! கலைஞரின் மேல் அப்படியொரு ஈடுபாடு எனக்கு!" என்கிறார் அமைச்சர்.

சென்ற டிசம்பரில்தான் பைபாஸ் சர்ஜரி செய்து கொண்டார் என்றாலும் தமது உடல் நிலையைப் பற்றிக் கவலையே படாமல் சுற்றுப் பயணங்கள் செய்து, தமது அமைச்சரக வேலைகளைக் கவனித்துக் கொண்டிருப்பவர். இவரது சுறுசுறுப்பைப் பார்த்த கலைஞருக்குப் பயம் வந்து விட்டதாம். அதனால் கலைஞரே சம்பந்தப்பட்ட டாக்டருக்கு போன் செய்து, இவர் இப்படி சுறுசுறுப்பாக வேலை செய்வதால், இவரது உடல் நலத்திற்கு ஏதும் பாதிப்பு வந்து விடுமோ என்று விசாரித்துத் தெளிவு பெற்ற பிறகுதான் சமாதானமானாராம்.

இப்போது கூட தொடையில் ஒரு சிறு ஆபரேஷன் செய்து கொண்டிருக்கிறார் அமைச்சர். ஆபரேஷன் முடிந்ததும் டாக்டர்கள் ஓய்வெடுத்துக் கொள்ளச் சொன்னதையெல்லாம் காதி

அறுபத்து நான்கு வயதாகும் அமைச்சர் கோ.சி. மணியின் சொந்த ஊர், மயிலாடுதுறைக்குப் பக்கத்திலுள்ள மேக்கிரிமங்கலம் என்னும் கிராமம். இப்போது எம்.எல்.ஏவாக வெற்றி பெற்றிருப்பது கும்பகோணம் தொகுதியில். 89-ல் தி.மு.க. ஆட்சிக்கு வந்த போதுதான்

நீங்கள் துவங்கிவிட வேண்டும். அதற்காகத் தான் எல்லாவற்றையும் லிஸ்ட் போட்டுக் கையில் கொடுத்திருக்கிறேன். அவ்வப்போது எனக்கு ரிப்போர்ட்டும் அனுப்ப வேண்டும்..." என்று கமிஷனர்களிடம் அமைச்சர் சொன்ன போது, நாம் இடைமறித்துக் கேட்டோம்.

"பல சமயங்களில் பாலாற்றிலிருந்து கொண்டு வரப்படும் குடிநீரும் சரிவரக் கிடைப்பதில்லை என்று பொது மக்கள் புகார் கூறினார்களே....?"

"அதற்கு பவர்கட்தான் காரணம்." - இது கமிஷனர்கள்.

"ஜெனரேட்டர்கள் இல்லையா?"

"தாம்பரம் வரைககுமான பம்பிங் ஸ்டேஷன்களில்தான் ஜெனரேட்டர்கள் இருக்கின்றன. அதன் பிறகு இல்லை. வேண்டுமென்று அரசுக்கு எழுதியிருக்கிறோம்."

"ஏன்? ஜெனரேட்டர்கள் வாங்கக் கூடாதா?" - நாம் அமைச்சரிடம் கேட்டோம்.

"வாங்கலாம்தான். அதற்கு நிதி ஆதாரம் தேட வேண்டுமே! அதனால் இது உடனடியாகத் தீர்க்கப்படுகிற பிரச்னை இல்லை."

"குடிநீர் வழங்குகிற விஷயங்களில் முன்னுரிமை கொடுக்கப்படும் என்று முதல்வர் கூறியிருக்கிறாரே?"

"அது, இதுவரை குடி நீரே வழங்கப்படாமல் இருக்கும் இடங்களுக்குத்தான். என்றாலும் இது போன்ற பிரச்னைகளை அரசு கண்டு கொள்ளாது என்பதில்லை. நிதி ஆதாரங்கள் தேவைப் படுவதால் தாமதமாகும். அவ்வளவுதான்!"

இதற்குள் தமிழ்நாடு குடிநீர் வடிகால் வாரியத்தின் மானேஜிங் டைரக்டர் இல. பழமலை ஐ.ஏ.எஸ்ஸும் வந்து விட்டார். அவரிடம் வெள்ளக்காடாகச் சாக்கடை நீரும் மழை நீரும் கலந்து தேங்கிக் கிடக்கும் சரஸ்வதி நகரின் அவலம் பற்றிச் சொல்கிறார் அமைச்சர்.

"நாளைக்கு உங்களுக்கு போர்டு மீட்டிங்கா... சரி, நாளை மறுநாள் செவ்வாய்க்கிழமை

# சுறுசுறுப்புக்கு ஓர் அமைச்சர்!

லேயே வாங்கிக் கொள்ளாமல், ஆபரேஷன் முடிந்த மறுநாளே டூர் கிளம்பிச் சென்று விட்டார். டூர் முடிந்து திரும்பிய பிறகும் ஓய்வெடுத்துக் கொள்ளாமல் நாம் அழைத்ததும் வரச் சம்மதித்தார் அமைச்சர்.

''பைபாஸ் சர்ஜரி செய்து கொள்வதற்கு மூன்று லட்சம் ரூபாய்க்கு மேல் செலவாகும் என்று சொன்னார்கள் டாக்டர்கள். அத்தனை பணத்திற்கு நான் எங்கே போவேன்? அதனால் சர்ஜரியைத் தள்ளிப் போட்டுக் கொண்டே வந்தேன். இதையறிந்த தலைவர் கலைஞர், தமது சொந்தச் செலவில் எனது பைபாஸ் சர்ஜரிக்கு ஏற்பாடு செய்தார். சர்ஜரி முடிந்ததும் தேவையான மருந்துகள் முதற்கொண்டு எல்லாவற்றையும் வாங்கிக் கொடுத்து என்னை ஊருக்கு அனுப்பி வைத்தார்!'' என்று நெகிழ்ச்சியுடன் குறிப்பிடுகிறார் அமைச்சர்.

ஒன்பதாம் வகுப்பு வரைதான் படித்திருக்கிறார் என்றாலும் தமது துறை பற்றிய விஷயங்களை விரல் நுனியில் வைத்திருக்கிறார். எளிமை என்பது இவரது வேஷமல்ல; இயல்பானது என்பதால், காண்டசா போன்ற ஆடம்பரக் கார்களில் இவர் பயணம் செய்வதில்லை!

இன்றைக்கு நிர்வாகம் செய்வதென்பது எப்படியிருக்கிறது? ''நல்ல அதிகாரிகளைக் கூட சந்தேகப்படும்படியான அளவுக்கு இப்போது நிர்வாகம் சீர்கெட்டுப் போயிருக்கிறது என்பது உண்மைதான். என்றாலும் இந்தச் சீர்கேடுகளையெல்லாம் நிச்சயமாகச் சரிப்படுத்தி விடவும் முடியும்!'' என்று உறுதியாகச் சொல்கிறார் அமைச்சர்.

''இருந்தாலும் நமது மக்களுக்குத் தங்கள் வீட்டைப் போலவே, வீதியையும், நாட்டையும் சுத்தமாக வைத்துக் கொள்ள வேண்டும் என்கிற எண்ணமும் வந்தாக வேண்டும். நான் ஜப்பான் போயிருந்த போது அந்த மக்களைப் பற்றி ஆகா ஓகோவென்று புகழ்கிறார்களே, அது நிஜம்தானா என்று சோதிக்க ஆசைப்பட்டேன். அதற்காகவே ஒரு சிகரெட் வாங்கிப் பிடித்து விட்டு அதை அப்படியே வீதியில் போட்டேன். இதைப் பார்த்த ஒரு ஜாப்பானியர், அமைதியாக வந்து, அந்த துண்டு சிகரெட்டை எடுத்துக் குப்பைத் தொட்டியில் போட்டு விட்டுப் போனார்; என்னிடம் எதுவுமே கேட்கவில்லை. நான் ஜப்பானியரின் தேசப்பற்றைத் தெரிந்து கொண்டது மாத்திரமல்ல; எனது செயலுக்கும் வெட்கப்பட்டேன். ஜப்பானியர்களின் உணர்வு நமது மக்களுக்கும் வர வேண்டும்!'' என்றார் அமைச்சர் கோ.சி. மணி.

காலையில் அந்தப் பகுதிக்குச் சென்று பார்வையிடுங்கள். இனியும் அந்த இடத்தில் கழிவு நீரும் சரி, மழை நீரும் சரி எதுவுமே தேங்கக் கூடாது. அதற்கு என்ன திட்டம் தேவையோ அதைப் போடுங்கள். நிதி ஆதாரம் ஒரு பிரச்னைதான் என்றாலும் அந்த பாரத்தை என் மீது போட்டு விடுங்கள். எப்படியாவது நிதி ஆதாரம் தேடித் தருவது என் பொறுப்பு. உடனடியாக வேலைகளைத் துவங்கி விடுங்கள்!'' என்றார் அமைச்சர்.

அப்போது, அந்தப் பகுதியின் சட்டமன்ற உறுப்பினரான வைத்தியலிங்கம், ''நான் வேண்டுமானால் கூடப் போகிறேனே...'' என்றார்.

''கூடப்போக வேண்டிய அவசியமே இல்லை. அப்படியே போனாலும் இடத்தைக் காட்டுவதோடு நிறுத்திக் கொள்ள வேண்டும். அதிகாரிகள் போடும் திட்டங்களில் குறுக்கிடு செய்யக் கூடாது!'' என்று கண்டிப்போடு சொன்னார் அமைச்சர்.

நாம் அமைச்சரிடம் விடை பெறும் சமயம், ''நீங்கள் கல்கி பத்திரிகைக்காரர்கள்தானே?'' என்றார் பழமலை.

''ஆமாம்!'' என்று நாம் சொன்னதும் அமைச்சரிடம், ''சார், கல்கி பத்திரிகையில் 'மாதம் ஒரு மாவட்டம்' என்று சுற்றுப் பயணம் செய்து எழுதிய போது (87-ல்) நான் புதுக்கோட்டை மாவட்டக் கலெக்டராக இருந்தேன். இவர்கள் பிரச்னைகளை எழுதுவதோடு நின்று விடுவதில்லை. ஆறு மாதங்கள் கழித்து, மீண்டும் அந்தப் பிரச்னைகள் என்னவாயிற்று என்றும் பார்த்து எழுதுவார்கள்!'' என்றார் பழமலை.

''அதனால் என்ன! தாராளமாக எழுதட்டும். அதுவரைக்குமா நாம் பிரச்னைகளுக்குத் தீர்வு காணாமல் இருக்கப் போகிறோம்! உடனுக்குடன் பிரச்னைகளைத் தீர்க்க வேண்டும் என்பதற்காகத்தானே உங்களைத் தேடித் தேடி குடிநீர் வடிகால் வாரியத் தலைவராக நியமிக்கச் செய்திருக்கிறேன்!'' என்றார் அமைச்சர்.

நம்பிக்கையோடும் சந்தோஷத்தோடும் விடைபெற்றோம் நாம்.

— இளங்கோவன், ஸ்ரீநிவாசன்

படங்கள் : பேஜர் கே. மூர்த்தி

திருப்பத்தூர்,
வ.ஆ.அ.மா.
28.3.93

# மதிப்பிற்குரிய அம்மையீர் அவர்களுக்கு,

வணக்கம்.

சற்றே வியப்பாக இருக்கும் தங்களுக்கு. தாங்கள் வகிக்கும் பதவிக்கு இம்முறையில் எழுதுவது முறையா என்பது தெரியவில்லை. மன்னிக்கவும்.

தாங்கள் வடார்க்காடு மாவட்டம் திருப்பத்தூரில் 27.3.93 சனிக்கிழமையன்று TMS மேல் நிலைப் பள்ளியில் ராதி பதிப்பகத்தின் திரு சுப்ரபாரதி மணியன் எழுதிய 'நாதம்' நூல் வெளியீட்டு விழாவில் கலந்து கொண்டு சிறப்புரையாற்றியது நினைவிருக்கும்.

அம்மேடையில் தாங்கள் பேசியது எனக்கு பிரமிப்பாக இருந்தது. இதுவரையில் தாங்கள் எழுதியன பற்றி ஒன்றும் அறியேன். படித்ததில்லை. காரணம் தாங்கள் கூறியது போன்று பெண்தானே என்ற அலட்சியத்தால் அல்ல. கொஞ்ச காலத்திற்கு முன்பு குமுதம் பத்திரிகையில் சில நடிகைகள் (அப்பொழுது பிரபலமாயிருந்த) தொடர்கதைகள் எழுதியிருந்தார்கள். அவையெல்லாம் 'Ghost' எழுத்தாளர்கள் கைவரிசை. சரி இவர்களுக்கு இருக்கும் பொறுப்பான பதவிகளில் இது போன்ற எழுத்து சரிப்பட்டு வராது. இதுவும் ஏதோ



வண்ணப்படம் : யோகா

''எத்தனையோ கடிதங்கள் வந்தாலும் இந்தக் கடிதத்தில் காணப்படும் உண்மை என்னை வெகுவாகக் கவர்ந்து விட்டதால் இதை பத்திரமாக வைத்திருக்கிறேன்!'' என்று கூறுகிறார் திலகவதி ஐ.பி.எஸ்.

Ghost என்று விட்டு விட்டேன். பேச்சைக் கேட்டபின், அடடா இவ்வளவு கோர்வையாக, தீர்மானமான பேச்சா. படிக்காமல் விட்டதற்கு வருந்துகிறேன். அவற்றையெல்லாம் திரும்பத் தேட ஆரம்பித்துள்ளேன்.

இலக்கியம் என்பதற்கு சில வரையறைகளை எழுத்தாளர்களும், சிந்தனையாளர்களும் வரையறுக்க முற்பட்டனர். ஆனால் இதுவரை இலக்கியம் இதுதான் என்று அறுதியிட்டு ஒரு formula கொணர இயலவில்லை. இது ஏன்? ஒவ்வொரு கால கட்டத்திலும் மக்களின் கலாசாரத்திற்கும், ரசனைக்கும் சார்ந்தது இலக்கியம் என ஓர் அறிஞர் கூறியுள்ளதைப் படித்துள்ளேன். அப்படி பார்க்கும் இன்றைய எழுத்துக்கள் எதிர் வரும் கால சந்ததியினருக்கு அப்போதைய எழுத்துக்களை விட மேம்பட்டதாக எண்ணலாம். ஏன் நாம் இப்பொழுது இலக்கியமாய்க் கருதும் நம் முன்னோர்களின் காலத்தேயும் குப்பைகள் வந்திருக்கலாம். தங்கம் மண்ணில் கலந்து கிடைத்து, அதனை உருக்கிப் புடம் போட்டது போல், குப்பைகள் யாவும் காலப் போக்கில் மறைந்து, சிறந்தன மட்டும் திருக்குறளாய், இராமாயணமாய், சிலப்பதிகாரமாய்க் கிடைத்துள்ளன.

அதுபோலவே பெரும்பாலும் இன்று வியாபார ரீதியாகப் பணம் சம்பாதிக்கும் நோக்குடனேயேதான் பத்திரிகைகள் ஆரம்பிக்கப்படுகின்றன என்பதே உண்மை. அவற்றில் நாம் எதிர்பார்க்கும் தரத்துடன் சிறுகதைகள் பிரசுரமாவதும் அபூர்வம். Sensational News ற் குத்தான் முதலிடம் கொடுப்பார்கள். விட்டில் பூச்சிகள் போன்ற பத்திரிகைகளும், கால ஓட்டத்தில் மறைந்து போகின்றன. சேற்றிலே செந்தாமரையாய் சில சிறந்த எழுத்தாளர்கள் தோன்ற இவைகளும் காரணமாய் இருந்திருக்கின்றன என்பது எனது தாழ்ந்த அபிப்பிராயம். ஆம். மா.வே. சிவகுமார், செளபா இன்னும் பலர் இப்படி தோன்றியவர்கள்தாம். தாங்கள் இவற்றையெல்லாம் குறிப்பிடாமல் பெரும் போக்காக எல்லாவற்றையும் தாக்கிப் பேசியது மனதை நெருடுகின்றது. குஷ்புவிற்காக சிறப்பு கவிதைப் போட்டி நடத்திய 'ஆனந்தவிகடனில்' இரு பரசுராம் பிஸ்வாஸ் எழுதிய புதிய ஆத்திச்சூடி கதைகளும், வைர விழா வெளியீடுகளாக வெளியிடப்பட்ட 'விழிப்புணர்வுச் சிறுகதை'களும் சமுதாயச் சீர்திருத்தத்திலும் சரி, பிற்காலத்தில் இலக்கியமாகவும் பேசப்படும் என்பதிலும் சரி எனக்கு ஐயமில்லை.

அப்புறம் சினிமா மீடியாவைப் பற்றிய தாக்கு. ஏன் அதிலும் சிறந்த தரமான பாடம் புகட்டும், படிப்பினைகளை - அனுபவங்களைத் தெளிவாக்கி, பிறருக்கு வழிகாட்டும் படங்கள் இல்லையா என்ன? இன்றும் கூட தொலைக்காட்சியில் வெளியான திரு கே. பாலசந்தர் அவர்களின் 'ஒரு வீடு இரு வாசல்' திரைப்படத்தில் பெண்களுக்கு ஆதரவாகப் பேசப்படவில்லையா? யதார்த்த உலகைத்தானே படம் பிடித்துக் காட்டினார். அது போலவே 'வானமே எல்லை'. இளைஞர்களுக்குத் தன்னம்பிக்கையூட்டும் விதத்தில்தானே படம் எடுத்தார். சினிமா என்ற மீடியம் பொது மக்களை நேரடியாகச் சென்று சேரும் ஒன்று. பத்திரிகைகள், படித்த மக்களை மட்டுமே பாதிக்கும். பாமர மக்களை நேரடியாகச் சென்று சேரும் சினிமாக்களில் குப்பைகளின் சதவீதம் அதிகம், அவ்வளவே.

கூட்டத்தின் போது நண்பர்களுடன் சேர்ந்து சிரித்தது தவறுதான். வருந்துகிறேன். பேரா. திரு அப்துல் காதர் அவர்களின் கல்லூரி கால ரசிகன். இது அவரது தனிப்பாணி. சிரிப்பினூடே சிந்தனைகளையும் சொல்லுவார். சிரித்து மட்டும் போய்விட்டு சிந்திக்க மறந்துவிடுவது நம் துரதிர்ஷ்டம்.

தங்கள் அளவிற்கு இலக்கியம் படித்தவனல்ல. என் மனத்தில் பட்டதை எழுத வேண்டும் போலிருந்தது. தங்களின் பரபரப்பான வேலைகளுக்கிடையே இக்கடிதம் நீண்ட நேரம் எடுத்துக் கொண்டிருக்கும். *Sorry*.

எழுத்துலகில் இன்னும் பல சாதிக்கவும் காவல் பணியில் தனி முத்திரை பதித்துச் சிறந்து விளங்கவும் வேண்டுகின்றேன்.

தங்கள் இருப்பிட முகவரி அறியாமல் அலுவலக முகவரிக்கே எழுத நேர்ந்து விட்டது மன்னிக்கவும்.

நன்றி.

தங்கள் உண்மையுள்ள,
இரா. ராஜன்பாபு

# நரசிம்மராவ் தேடிய ஃபைல்!

## தில்லி நியூஸ்

●● பிரதமருக்கு மட்டுமே சலுகை மாதிரி வழங்கப்பட்டுள்ளது ரெஸ்ட்ரிக்டட் எக்ஸ்சேஞ்சர், அல்லது ரெக்ஸ் என்று சுருக்கமாகச் சொல்லப்படும் தனி டெலிபோன் இணைப்பு. இந்த வசதியை தேவேகௌடாவின் அனுமதியுடன், நரசிம்மராவ் தமது 9, மோதிலால் நேரு சாலை இல்லத்தில் வைத்துக் கொண்டிருக்கிறார். இதன் மூலம் பிரதமரிடமோ, அமைச்சர்களிடமோ, அமைச்சரவை அதிகாரிகளிடமோ, வி.ஐ.பிக்களிடமோ, நேரிடையாகப் பேச முடியும். ராவ் சமீபத்தில் வெளியுறவுத் துறைச் செயலரிடம் பேசி, ஒரு குறிப்பிட்ட 83 ஆம் வருட ஃபைலைக் குடைந்து எடுக்கச் சொன்னார். லக்குபாய் குறிப்பிட்ட தேதியில், தாம் நியூயார்க்கில் இருந்ததாக ஃபைல்களில் ஏதானும் இருக்கிறதா என்று தெரிந்து கொள்ளத்தான்!

●● இது நம்புவதற்குக் கொஞ்சம் கஷ்டமானதாகத்தான் இருக்கும். ஆனால் நடந்தது உண்மை! நரசிம்மராவுக்கு எதிராகக் கையெழுத்து வேட்டையில் தீவிரமாக இறங்கியிருக்கும் கருணாகரன், பார்லிமென்ட் வளாகத்தில் காங்கிரஸ்காரர் யார் தம்மைப் பார்க்க வந்தாலும், ஒரு கையெழுத்து வாங்கி விடுகிறார் - த.மா.கா. உறுப்பினர் உட்பட!

தினம் பிற்பகல் 12 மணிக்கு, நரம்புத் தளர்ச்சிக்காகக் கருணாகரன் வழக்கமாக உட்கொள்ளும் மருந்தை, பார்லிமென்ட் மத்திய ஹாலுக்குக் கொண்டு வந்தார் ஒருவர்; கருணாகரனின் உதவியாளர் அவரிடம் கொடுத்திருந்தார். கருணாகரனுக்கு மருந்து சமாசாரம் எல்லாம் மறந்து போய்விட்டது. மருந்து கொண்டு வந்தவரிடம் கண்டிப்பான தோரணையில், "போடுங்கள் கையெழுத்து. உம், போடுங்கள்!" என்று மிரட்டியிருக்கிறார். நல்ல வேளையாக அங்கிருந்த இரண்டு எம்.பிக்கள் தலையிட்டு, அவர் பார்லிமென்ட் ஊழியர்தான், காங்கிரஸ் எம்.பி. அல்ல, என்று வாதாடிய பிறகே கருணாகரன் அவரை விட்டாராம்!

●● முன்னாள் பிரதமர் நரசிம்மராவ் மாதிரி சீக்கிரமே தூங்கப் போவதில்லை தேவேகௌடா. இரவு பன்னிரண்டு - ஒரு மணி என்பது சர்வ சாதாரணம்.



காலை 6 மணி, 7 மணிக்கெல்லாம் கூட, பத்திரிகையாளருக்குப் பேட்டி கொடுக்கிறார் தேவேகௌடா. மாலை 6 மணி என்று நினைத்துக் கொண்டு, பேட்டியைத் தவறவிட்ட பத்திரிகையாளர் கூட இருக்கிறார்!

●● தகவல் - தொடர்புத் துறை அமைச்சர் பேனி பிரசாத் வர்மா, முலாயம் சிங் யாதவ்வின் சமாஜ்வாதி கட்சியைச் சேர்ந்தவர். உ.பி.யில் கணிசமான அளவு வோட்டு வாங்கக்கூடிய அரசியல்வாதி. அவரை எப்படியாவது இழுத்துப் போட்டு விட்டால் நல்லது என்று ஒரு பக்கம் பி.ஜே.பி. பார்க்கிறது: ஜெயித்தால் கல்யாண் சிங்கின் நெ. டு.வாகப் போட்டு விடுவார்களாம். இன்னொரு பக்கம் கன்ஷிராமுக்கும் அவர் மீது ஒரு கண். மாயாவதியின் கீழே துணை முதல்வராகப் போட்டு விடத் தயாராக இருக்கிறாராம்.



• ரீதுபேரி

●● தீஸ் ஹஸாரி கோர்ட்டில் ஆஜராக வேண்டியபட்சத்தில், பாதுகாப்பைக் காரணம் காட்டி, பிரதப மெட்ரோ பாலிடன் மாஜிஸ்திரேட்டின் அலுவலகத்தையே வேறு எங்காவது மாற்றி விடுமாறு ஒரு விசித்திரமான கோரிக்கையுடன் ராவ் ஆதரவாளர்கள், தில்லி நீதிமன்றப் பதிவாளரிடம் அணுகினார்கள். பதிவாளர் பாவம் விழி விழி என்று விழித் திருக்கிறார். நல்ல வேளையாக, நீதிபதி மகாஜன், ராவ் தீஸ் ஹஸாரி கோர்ட்டில் ஆஜராக வேண்டியதில்லை 'என்று சொன்னதும் பெரிய நிம்மதி.



• தேவே கௌடா



• கருணாகரன்

●● குடியரசுத் தலைவர் சங்கர் தயாள் சர்மாவுக்கும் ஜனதாதள அரசுக்கும் கொஞ்சம் சரிப்பட வில்லை தான். சர்மா கிழக்கு ஐரோப்பிய நாடுகளுக்கு மே மாதமே போவதாக இருந்தார். தேர்தல் காரணமாக, அந்த ஆகஸ்ட்டுக்குத் தள்ளிப் போட்டார். இப்போது, 'அக்டோபர் நவம்பரில் போனால் போதாதோ?' என்று கௌடா அரசு கேட்கிறதாம்.

●● நாம் அட்லாண்டா ஒலிம்பிக்சுக்குப் போய்ப் பதக்கம் வாங்கி வராவிட்டாலும் கொடியைத் தூக்கிக் கொண்டு, மார்ச்பாஸ்ட் போடும் போது கவனத்தைக் கவரக்கூடிய 'உடையை அணிய வேண்டும் என்பதற்காக, பிரபல இளம் டிசைனர் ரீது பேரி ஆட்ட வீரர்களுக்கும், வீராங்கனைகளுக்கும் உடைகளை டிசைன் செய்து கொடுத்திருக்கிறார். முன்பே தில்லி குதிரைப்படைக்கும், பாண்டு வாத்திய கோஷ்டிக்கும் உடை டிசைன் செய்து செய்தவரிவர்!

●● தில்லி வட்டாரத்தில் ஜனதா தளத்தை உள் அர்த்தத்துடன் 'JD' என்கிறார்கள். அதாவது ஜூன் முதல் டிசம்பர் வரை என்று அர்த்தமாம்.

— நியூஸ்வாலா, கௌதம்



• ரணாரித்

# ஒரு மன்னர் + இரு பிரதமர் + ஜோஸ்யம் = கம்போடியா!

ஒரு நாட்டுக்கு ஒரே சமயத்தில் இரண்டு பிரதமர்கள்! கம்போடியா நாட்டு அரசியல் விநோதம் இது.

'கிமர் ரூஜ்' (KHMER ROUGE) பற்றித் தெரிந்து கொள்ளாவிட்டால் கம்போடிய அரசியல் சரியாகப் புரியாது. போல் பாட் (POL POT) என்ற மகாதீவிரவாதியின் ஆயுதம் ஏந்திய கொரில்லா போர் கும்பல் இது. கொலை செய்வது அல்வா சாப்பிடுவது மாதிரி.

'75-ம் ஆண்டு முதல் '79 வரை இந்தக் கும்பலின் கையில்தான் கம்போடியா இருந்தது. போல் பாட்டின் கொடுங்கோல் ஆட்சி. 'அரசை எதிர்ப்பவன் யாராயிருந்தாலும் கொன்று போடு' என்பது போல் பாட் இட்ட கட்டளை. அறிவாளிகள், வியட்நாமியர்கள், புத்த பிக்குகள் என்று இருபது லட்சம் பேர் பலியானார்கள்.

சமயம் பார்த்து, அண்டை நாடு வியட்நாம் கம்போடியாவைக் கைப்பற்றி, போல் பாட்டை பதவி இறக்கியது. 'கறுப்பு ஆட்சி' ஒழிந்தது. அதே சமயம் வியட்நாமின் ஆதிக்கம் தொடங்கியது. பின்னர் பல்வேறு முயற்சிகளின் பலனாய் 'பாரீஸ் ஒப்பந்தம்' (1991). வியட்நாம் விலகியது. ஹுன் சென் என்பவர் பிரதமரானார். 1993-ல் ஐ.நா.வின் மேற்பார்வையில் பொதுத் தேர்தல். கிமர் ரூஜ் கலந்து கொள்ளவில்லை.

இரண்டு பிரதான கட்சிகள். ஹுன்சென் தலைமையில் கம்போடியன் மக்கள் கட்சி. ரணாரித் தலைமையில் ஃபன்சின்பெக் (FUNCINPEC) கட்சி. ஃபன்சின்பெக் அமோக வெற்றி. ஆனாலும் தேர்தல் முடிவுகளை ஹுன்சென்னின் ஆளும் கட்சி ஏற்றுக் கொள்ளவில்லை. பதவி ஆசை. வேறென்ன?

நடுவில் புகுந்தது கிமர்ரூஜ். 'மரியாதையாக மக்களின் தீர்ப்பை மதி. மிதிக்காதே. ரணாரித் வசம் ஆட்சியைக் கொடு' என்று ஹுன் சென்னை மிரட்டியது.

இங்கே ஒரு விஷயம். இந்த ரணாரித் யார் தெரியுமா? கம்போடியா மன்னர் சிஹானுக் அவர்களின் சாட்சாத் மகன். மன்னர் மக்களுக்குக் கடவுள் போல. இருந்தாலும் அவ்வளவாக அரசியல் பலம் இல்லாத மன்னர் அவர்.

கடைசியில் ஒருவழியாக பேசிப் பேசி ரணாரித் - ஹுன்சென் இருவருமே பிரதமர்களாக இருப்பது என்று முடிவாயிற்று.

இருந்தாலும் இப்போது ஹுன் சென் கைதான் ஓங்கியிருக்கிறது. முக்கியமான இலாகாக்கள் அவர் வசம்.

மன்னர் சிஹானுக் நோயாளி மனிதர். புற்றுநோய், நீரிழிவு இரண்டும். ரொம்ப நாளாக சீனாவில் தங்கி சிகிச்சை எடுத்துக் கொண்டே அவ்வப்போது அறிக்கை விட்டுக் கொண்டிருக்கிறார்.

லேட்டஸ்ட் அறிக்கை : "நான் இன்னும் ரொம்ப நாள் இருக்க மாட்டேன். ரணாரித் என் வாரிசாக அரியணை ஏறட்டும். ஒத்துழையுங்கள்."

ஓ.கே. என்கிறார் ஹுன்சென். அவரது குடும்பி சும்மா ஆடவில்லை. ஏற்கெனவே சக பிரதமராக இருந்து பழகியவராதலால் ரணாரித்தின் பலவீனங்கள் அவருக்குத் தெரியும். எனவே சமாளிப்பது எளிது. அவர் மன்னராகிவிட்டால் தாம் மட்டுமே ஒரே பிரதமராக போட்டியின்றி இருக்கலாம் என்று ஒரு கல்லில் இரண்டு மாங்காய்.

சில வாரங்கள் முன்பு கம்போடியா முழுவதும் ஒரே பேச்சு : 'போல் பாட் இறந்து விட்டாராமே!' அப்படி ஒரு செய்தி கிளப்பி விடப்பட்டிருக்கிறது. உண்மை தெரியவில்லை. ஆனால் கிமர் ரூஜ் சோர்வடைந்து, பேச்சு வார்த்தைக்குத் தயாராகிக் கொண்டிருக்கிறது என்பது மட்டும் உண்மை.

1998-ல் அடுத்த பொதுத் தேர்தல். அதற்குள் மன்னர் சிஹானுக் செய்து முடிக்க வேண்டிய பணிகள் இரண்டு. தன் மகன் ரணாரித் - ஹுன் சென் இருவருக்குமிடையே பூடகமாய் எரிந்து கொண்டிருக்கும் ஈகோ தீயை அணைக்க வேண்டும். கிமர்ரூஜ் பிரிவை நாட்டின் பிரதான வாழ்க்கை ஓட்டத்தோடு இணைக்க வேண்டும்.

இவை இரண்டும் மன்னரால் முடியும் - மன்னரால் மட்டுமே முடியும் என்று மக்கள் நம்பிக் கொண்டிருக்கிறார்கள். ஆனால் மன்னரோ ஜோஸ்யத்தை நம்பிக் கொண்டிருக்கிறார். ஜோஸ்யர் சொல்லியிருப்பது :

"1997-ல் மன்னா, நீ மரணமடைவாய்."

**- ராணி மைந்தன்**




1996 ஆகஸ்ட் 11
தாது ஆடி 27
மலர் : 55
இதழ் : 2



கல்கி

தமிழ்த்திரு நாடுதன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா - பாரதியார்.




## புலிகள் பிரச்னைக்குப் புதிய தீர்வு...?

இலங்கை ராணுவம், புலிகளுக்கு எதிராக நடத்தி வரும் தாக்குதலுக்கு 'சத்ஜயா' என்று பெயரிடப்பட்டிருக்கிறது! வாய்மை வெல்லட்டும் என்ற நோக்கில் வைக்கப்பட்ட பெயர்.

ஆனால் அந்த முயற்சியில் இரு தரப்பினரும் இழந்து வரும் உயிர்களின் எண்ணிக்கையைப் பார்க்கும்போது, துக்கம்தான் மேலிடுகிறது.

கடந்த ஜூலை பதினெட்டாம் தேதியன்று புலிகள் நடத்திய தாக்குதலில் மட்டும், இலங்கை முல்லைத்தீவு படைப்பிரிவைச் சேர்ந்த 1208 வீரர்கள் உயிரை விட்டிருக்கிறார்கள் என்று கருதப்படுகிறது. இந்திய அமைதிப்படை இலங்கையில் தங்கியிருந்த 32 மாத காலத்தில் ஏற்பட்ட உயிரிழப்பைவிட (1152) இது அதிகம்.

அதிகாரபூர்வ அரசுத் தகவல்கள், இறந்தவர்களின் எண்ணிக்கையைக் குறைத்தே சொல்கின்றன. ஆனால், எதிர்க்கட்சித் தலைவர் ரனில் விக்ரமசிங்கே, ஆயிரத்துக்கும் மேற்பட்டோரை பலிகொண்ட இந்தப் போர், இலங்கை ராணுவத்துக்கு வரலாறு காணாத அடி என்பதைச் சொல்லியிருக்கிறார்.

இத்தனைக்கும் காரணம், புலிகளின் மூடப்பிடிவாதம்தான் என்பதில் சந்தேகமே இல்லை.




இலங்கை அதிபர் வழங்க முன்வந்த, ஏராள உரிமைகளை உள்ளடக்கிய சுயாட்சியைப் புறக்கணித்து, 'அடைந்தால் தமிழீழம்; அல்லது மரணம்' என்று அடம்பிடித்து வருகின்றனர் பிரபாகரன் தரப்பினர்.

இலங்கை அரசும் வேறு வழியின்றி யுத்தத்தைத் தொடர்கிறது.

ஆனால், புலிகளைப் போல் கொரில்லா யுத்த முறையைக் கையாண்டு, மறைந்திருந்து தாக்குவோரை ஒருபோதும் வெற்றி கொள்ள முடியாது.

விளைவு...? போராளிகளும் சரி, ராணுவ வீரர்களும் சரி, கொத்துக் கொத்தாகச் செத்தொழிந்து வருகிறார்கள். பொது மக்களுக்கோ, சொல்லி முடியாத துன்பம்.

இரு தரப்பிலும் இளைஞர்கள் கட்டாயப் போரில் ஈடுபடுத்தப்படுவதால் நாட்டின் இளமை சக்தியும் அநியாயமாக விரயமாகிக் கொண்டிருக்கிறது.

பிரச்னைக்கு முடிவு, பேச்சுவார்த்தை மூலம்தான் சாத்தியம் என்பது உலகறிந்த விஷயம். ஆனால், இன்றைய சூழ்நிலையில், சம்பந்தப்பட்ட இரு பிரிவினருமே பேச்சு வார்த்தைக்கு முயலும் மனநிலையில் இல்லை.

இந்திய அரசு மட்டும் மனம் வைத்தால், இந்த நிலையை மாற்ற முடியும். அண்டை நாட்டில் சகோதர தமிழர்களும் சிங்களர்களும் அடித்துக் கொண்டு மடிவதை முடிவுக்குக் கொண்டுவர இயலும்.

'எப்படி..?'

பாலஸ்தீன் பிரச்னையை அமெரிக்க அரசு கையாண்டது போல், காதும் காதும் வைத்த மாதிரி செயல்பட வேண்டும்.

சமாதானப் பேச்சுவார்த்தைகளைத் துவக்கி நடத்த இந்தியப் பிரதிநிதிகளைத் தேர்ந்தெடுக்காமல், புலிகள்-இலங்கை அரசு ஆகிய இருதரப்பினர்பாலும் சார்பற்ற வேறு நாட்டைச் சேர்ந்த அரசாங்கப் பிரதிநிதிகளைத் தூது அனுப்பலாம்.




அந்த தூதர்கள் ரகசியப் பயணம் மேற்கொண்டு, புலிகள் தலைமையிடமும் அதிபர் சந்திரிகாவிடமும் தனித்தனியே பேசிப் பார்த்து, பின்னர் ராஜதந்திரத்தைக் கையாண்டு, இரு தரப்பினரும் ஏற்கக் கூடிய ஒரு திட்டத்தை வகுக்கலாம். பிறகு, அவர்கள் சந்தித்துப் பேசவும் ஏற்பாடு செய்து விடலாம்.

இந்திய அரசாங்கப் பிரதிநிதிகள் நேரடியாகச் சென்று, இத்தகைய முயற்சியில் ஈடுபட்டால், புலிகள் தரப்பில் நியாயமான பயங்களும் சந்தேகங்களும் எழும். அதையே மூன்றாம் நபர் செய்யும்போது, அவரது நோக்குகளுக்கு உள்ளர்த்தம் கற்பிக்காமல், திறந்த மனத்துடன் இரு தரப்பினரும் அந்தத் தூதர்கள் மூலம் பேச்சு வார்த்தை நடத்த வாய்ப்பு இருக்கிறது.

அந்த வாய்ப்பைப் பயன்படுத்தி, 'தனித் தமிழ் ஈழம் என்ற கோட்பாடு, சொல்வதற்குச் சிறப்பாக இருக்கக் கூடும்; ஆனால் நடைமுறைக்கு உகந்தது கூட்டாட்சி தத்துவம்தான் **(federal state)** என்பதை தூதுக்குழு பிரபாகரன் பிரிவினருக்கு உணர்த்தலாம்.

இந்த மாதிரி முயற்சியும் விரைந்து பலன் அளித்துவிடும் என்று சொல்ல முடியாது. தொடர்ந்து சில ஆண்டுகள் முயன்று வெற்றி பெறலாம்.

இலங்கைப் பிரச்னையானது தமிழ் நாட்டையும் தமிழக மக்களையும் உணர்வு பூர்வமாய் பாதிக்கும் விஷயம். எனவே, அயல்நாடுகளைச் சேர்ந்த ஒரு நடுநிலைக் குழுவை மத்திய அரசு நிறுவ வேண்டும், இலங்கைக்கு அதை ரகசியமாகத் தூது அனுப்ப வேண்டும் என்று தமிழக முதல்வரே மத்திய அரசுக்கு எடுத்துச் சொல்லி வலியுறுத்தலாம்.

மத்திய அரசும் தனக்கு இருக்கும் 'மெஜாரிட்டி' தலைவலிகளைக் கொஞ்சம் மறந்து விட்டுச் செயல்படலாம்.

ஆட்சி அமைப்பதில் காட்டிய ராஜதந்திரத்தை, ஐக்கிய முன்னணி அரசு, அண்டை நாட்டின் பிரச்னையைத் தீர்ப்பதில் ஏன் காண்பிக்கக் கூடாது!

# சும்மா இருங்க



கண், காது, மூக்கு போன்ற உறுப்புகள் மனிதவேடம் தரித்த அத்தனை பேருக்கும் பொதுவான அம்சம் என்றாலும், இவற்றுள் ஏதாகிலும் ஒன்று அபூர்வமாய் யாரேனும் சிலருக்கு வித்தியாசமான 'சைஸில்' அமைந்து, வேடிக்கை காட்டுவதுண்டு!

இந்த வகையில் காஞ்சனமாலாவின் கவலைக்குரிய விஷயம் –

காது!

இரண்டு பேருக்கான ரேஷனை ஒருவருக்கே அள்ளி விட்டது போல் பெரிய காது!

மேற்படி (வ)மகா காதுகளுக்குத் தோடு போட்டுக் கொள்ளப் பிரியப்படும் பட்சத்தில், ஒட்டியாணத்துக்கான கிரயத்தை விரயம் செய்ய வேண்டி இருக்கும் என்பதால் காஞ்சனமாலா தோடு போட்டுக் கொள்ளவில்லை!

செல்வி(27) காஞ்சனமாலா எனக்கு ஆன்ட்டி!

'ஆன்ட்டி' என்ற ஆங்கிலப் பதத்துக்கு தாங்கள் 'எதிரி' என அர்த்தம் பண்ணிக் கொண்டிருந்தால் கூட பரவாயில்லை; அந்த அளவுக்கு என்னை அன்னாருக்கு (அவ்வப்போது) பிடிக்காது!

என்றாலும் –

அடியேன் 'ஆன்ட்டி' எனப் பதப்பிரயோகம் செய்தது, அப்பாவின் ஒன்று விட்ட தங்கை என்ற உறவு முறையை விளம்ப!

பெற்றோரை இழந்த நான் முதல் அப்பாவின் பாதுகாப்பில் உள்ள ஆன்ட்டி, என்னிலும் ஈராண்டு சீனியர். மாநில அரசின் 'கொடுக்கல் – வாங்கல்' இல்லாத அலுவலகத்தில் தட்டச்சர். வீட்டின் முகப்பு அறையில் வாசம்...

போன வாரம் –

மகளிர் மன்ற ஆண்டு விழாவுக்கு மகிழ்ச்சி பொங்கப் புறப்பட்டுப் போன ஆன்ட்டி, திரும்பி வந்தபோது தேவைக்கதிகமாய் துக்கத்தைத் தூக்கிக் கொண்டு வந்திருந்தார்...

காரணம் தெரியவில்லை. யார் கேட்டும் பதில் இல்லை. ஒருவழியாய் அப்பா வந்து வினவியபோதுதான் விவரம் தெரிந்தது –

மன்றத்தில் இரண்டு காஞ்சனமாலாக்கள் அங்கத்தினராய் உள்ளபடியால், தன்னை 'காது பெருத்த காஞ்சனமாலா' என்று குறிப்பிடுவது அரசல் புரசலாய்க் காதில் விழுகிறது என்று ஆன்ட்டி சொல்லவும் –

# காதை...

கொதித்தது ரத்தம் எனக்கு!

"டிஷ் ஆன்ட்டனா மாதிரி காதை வைத்துக் கொண்டு, அரசல்புரசலாய் கேட்டுக் கொண்டு வந்து நிற்பானேன்..." என்று நான் குதிக்க –

'பளார்' என்ற அறையில் பழுத்தது கன்னம்!

அப்பாதான்.

உணர்ச்சிவசப்பட்டு ஆன்ட்டியின் காதுகளை விமர்சித்த குற்றத்துக்குக் கன்னத்தின் மேல் பலன்!

**ம**றுநாள்.

கொள்ளை மகிழ்ச்சியை அள்ளிக் கொண்டு வீடு திரும்பிய ஆன்ட்டியின் கையில் 'செல்வம்' தினசரியின் 'செவ்வாய் மலர்'.

மலரில், மலர்ந்த முகத்துடன் பிரபல நடிகை பாதமா பஞ்சகியின் படம் – பேட்டி.

தேவைக்கு அதிகமாய் இருந்த தன் மூக்கை பிளாஸ்டிக் சர்ஜரி மூலம் சின்னது பண்ணிக் கொண்டது பற்றியும், சிக்கனமாக்கப்பட்ட மூக்கு கொண்டு வந்த புதிய படவாய்ப்புகளால் இன்னும் கால் நூற்றாண்டுக்கு 'கால்ஷீட்' இல்லை என்பதையும் தெரிவித்திருந்தார், பஞ்சகி.

கால் பக்கத்தில் பஞ்சகியின் படமும் அரைப் பக்கத்தில் புதிய மூக்கு(மட்டு)ம் பிரசுரிக்கப்பட்ட வகையில் பேட்டி துணுக்காகிப் போயிருந்தது.

"மூச்சு விடுவதற்கு மூலகாரணமான மூக்கையே மாற்றி அமைக்கும்போது, காதுக்கென்ன?" என்ற ஆன்ட்டியின் கேள்வியில் பிறவிப் பயனை அடைந்து விட்ட பெருமை.

"தாராளமாகச் செய்யலாம்" என்றேன்.

"நாளை மாலை ஐந்து மணிக்கு டாக்டர் மேனனிடம் அப்பாயின்ட்மென்ட் கூட வாங்கி விட்டேன்" என்று குதூகலத்துடன் சொன்ன ஆன்ட்டியின் காதுகளை குத்துமதிப்பாய் ஒருமுறை பார்த்து வைத்தேன்.

"பகவான் படைத்த உடல் உறுப்புகளை – அவை பழுதில்லாமல் இருக்கும் பட்சத்தில், திருத்தி அமைக்க மனிதனுக்கு உரிமை இல்லை" என்று அப்பா கொள்கை ரீதியாக ஒதுங்கிக் கொண்டு விட –

அம்மாவையும், பக்கத்து வீட்டு மிலிட்டரி மாமியையும் அங்கத்தினர்



லைஃபான்

''நான் எது சொன்னாலும், நீ காதிலேயே போட்டுக்க மாட்டேங்கறியே?''

''மாட்டல் வாங்கித் தரேன்னு சொல்லுங்க. போட்டுக்கிறேன்.''

- ஆர். வசந்தகுமார்



களாய் கொண்ட, 'ஆன்ட்டி காது சீரமைப்புக் குழுவை' நான் தலைமைதாங்கி ஏகுவதாக முடிவாயிற்று!

அடுத்த நாள்.

டாக்டர் மேனனின் கிளினிக்.

- சுத்தமான விட்டலாச்சார்யா ஸ்டைல்.

"இவங்கதான் காஞ்சனமாலா" என்று 'ஆன்ட்டி'யை முன்னிறுத்தி, நாங்கள் புடை சூழ -

"ஒருவர் மட்டும் உடன் வரலாம்" என்ற சேவகரின் கண்டிப்பில், அம்மாவும் மிலிட்ரி மாமியும் வாசலிலேயே கத்திகரிக்கப்பட்டு, நான் மட்டும் ஆன்ட்டியுடன் உள்ளே பிரவேசித்தேன்.

புதிதாக வந்த ஆங்கில இங்கில படத்தைப் பார்ப்பது போல் ஆன்ட்டியின் காதுகளையே பார்த்தார்...

செவிகளை ஆழ்ந்து அவதானித்த பின்பு டாக்டர் பார்வையைத் திருப்பவும், அவசர அவசரமாகத் தன் காதுகளை ஒருமுறை தொட்டுப் பார்த்துக் கொண்ட ஆன்ட்டியின் செய்கை என்னை சிரிப்பின் உச்சத்துக்குக் கொண்டு சென்றாலும், சிரிக்க முடியாத அவஸ்தை.

இதற்குள் பல்வேறு வகையான காதுகளின் படங்கள் சேகரிக்கப்பட்ட ஆல்பம் ஒன்றைச் சேவகர் கொண்டு வந்து மேஜையில் வைக்க, ஒவ்வொன்றாய் புரட்டிப் பார்த்து ஆன்ட்டியின் காது போன்ற ஒரு படத்தை எடுத்தார் டாக்டர்.

ஓரிரு நிமிடங்கள் படத்தையும் காதையும் மாறி மாறிப் பார்த்து விட்டு, சட்டென்று கத்தரிக்கோலை எடுத்துக் காதில் (படத்தில்தான்) உபரியாக இருந்த பகுதியை டாக்டர் கத்திரிக்கவும் பதறிப் போய் என்னிடம் வந்தார் ஆன்ட்டி.

"காதின் மொத்தப் பரப்பிலும் டாக்டர் கை வைப்பார் போலிருக்கு! எனக்கு அந்த அவஸ்தை வேண்டாம். முடிந்தால் இந்த ஜோனைப் பகுதியை மட்டும் சரிசெய்யச் சொல். இல்லாவிட்டால் போய் விடலாம்" என்று படபடத்த ஆன்ட்டிக்கு ஆறுதல் சொல்லி அமரவைத்து விட்டு, டாக்டரிடம் ஆன்ட்டியின் 'அவா'வைச் சொன்னேன்.

'அற்பப் பதரே! எனக்கே சர்ஜரி சொல்லித் தருகிறாயா!' என்பது போல் பக்கவாட்டில் பார்த்து விட்டு, "டாக்டர் பெல்லிதான் இந்த சர்ஜரியை செய்யப் போகிறவர்" என்று முதல் முறையாகத் திருவாய் மலர்ந்தார், டாக்டர்.

- டாக்டர் பேசுவார் என்பது இதன் மூலம் நிரூபணமாயிற்று!

"சர்ஜரி என்றைக்கு?" என நான் அவ லுடன் கேட்க,

"உங்க அதிர்ஷ்டம்! டாக்டர் பெல்லி நாளைக்கே ஸ்விட்சர்லாந்திலேருந்து வந்துடறார்" என்ற பதில், சேவகருடையது.

மீதி விவரங்களையும் சேவகரிடமே தெரிந்து கொள்ளலாம் என்ற பாவத்தில் நான் ஆன்ட்டியைப் பார்க்க -

தனது லெட்டர் ஹெட்டில் எதுவோ எழுதி முடித்த டாக்டர், அதை உறையிலிட்டு முகவரியை எழுதியபோதுதான் அவர் எழுதப் பிரயோகித்த மொழி ஆங்கிலம் என்பதும், நகரின் உலகப் புகழ்பெற்ற மருத்துவமனையில் சர்ஜரி என்பதும் தெரியவந்தது.

வெளியில் வந்து பார்த்தபோது ஆச்சரியம் -

அம்மா - மிலிட்ரி மாமி தவிர வேறு சிலரும் வந்து காத்திருந்தார்கள்.

"ஒரு நாளைக்கு மூணு பேருக்கு மேல் பார்க்க மாட்டாரார்களாம்" என்று தகவல் சேகரித்துச் சொன்னார், மிலிட்ரி மாமி.

சேவகரிடம், "டாக்டர் பீஸ்?" என்றேன்.

"சர்ஜரிக்குப் பிறகு" என்றார்.

ஆன்ட்டியிடமிருந்து முதுகுப்புறமாய்ப் பெயர்ந்து வந்த பத்து ரூபாயை வாங்கி, அன்பளிப்பாக சேவகரிடம் நீட்டினேன்.

"வேண்டாம்! நாளொன்றுக்கு டாக்டர் தரும் நூத்தைம்பது ரூபாய் போதும் எனக்கு" என்றார்.

தூக்கிவாரிப்போட்டது.

நித்தம் மூன்று கேஸ் மட்டுமே பார்க்கிற டாக்டர், சேவகருக்கே நூற்றைம்பது படி அளக்கிறார் என்ற ரீதியில் சர்ஜரியின் விலையைக் கணக்கிட்ட போது தலையைச் சுற்றியது.

எனினும், ஆன்ட்டியிடம் பொருளாதாரம் பேசி புதிய சிக்கலைத் தோற்றுவிக்கக் கூடாது என்ற வைராக்கியத்தில் வாயைக் கட்டிக் கொண்டு விட்டேன்.

பிரம்மாண்டமான மருத்துவமனையின் 'பிளஸ்' விங்.

டாக்டர் பெல்லியிடம் முன்னிலைப் படுத்தப்பட்டு, நானும் ஆன்ட்டியும்...!

பெல்லி என்ற பெயரைக் கேட்டதும் தொந்தியும் தொப்பையுமாய் இருப்பார் என்று நினைத்துப் போன எனக்கு, வாயும் வயிறும் ஒட்டிப் போய், அகன்ற ஆசனத்தின் அரைக் கால் பகுதியில் மட்டுமே உட்கார்ந்திருந்த டாக்டர் பெல்லியைப் பார்க்கப் பரிதாபமாக இருந்தது. ஆன்ட்டியின் முகத்திலும் அனுதாப அலைகள்...

உலகம் முழுமையும் பயணித்து மனித அவயவங்களை மாற்றி அமைக்கிற பெல்லி, பிளாஸ்டிக் சர்ஜரியின் முதல் இலக்கே தான் தான் என்பதை உணராமல் இருந்தார் என்பதற்கு இடம் மாறி இருந்த அன்னாரின் கண்ணும், மூக்கும் கட்டியங்கூறின. அவைகளை முதலில் திருத்தி அமைக்க வேண்டும் போலிருந்தது.

அதென்னவோ, சர்வதேச ரீதியில் மேதைகளின் தோற்றத்தில் மேம்பாட்டுக்கே வழி இல்லை போலும்!

டாக்டர் மேனன் கொடுத்தனுப்பியிருந்த கடிதக் குறிப்பைப் படித்து விட்டு, பெரிய தாளில் அச்சிடப்பட்ட காது படம் ஒன்றை ஆன்ட்டியிடம் வழங்கி, "ஆஸ் யூ ப்ளீஸ்" என்றார் டாக்டர் பெல்லி.

விடைத்தாளைப் பெற்றுக் கொண்ட +2 மாணவி மாதிரி, காது பற்றின கஷ்டம் இன்றோடு தொலைந்தது என்ற குதூகலத்தில், படத்தைப் பெற்றுக் கொண்ட ஆன்ட்டி, டாக்டர் மேசையில் இருந்த பென்சிலை எடுத்து (விமர்சனத்துக்குரிய) காதின் கீழ்ப் பகுதியை பென்சிலால் வெட்டி, நீக்கப்பட வேண்டிய பரப்பளவு முழுமைக்கும் பென்சிலால் வண்ணம் தீட்டினாள்...

"போதுமே" என்று நான் சொல்லவும், வெட்கித்து, சிரித்து, படத்தை டாக்டரிடம் நீட்டவும் –

"ஓ.கே?" என்றார் பெல்லி.

"ஓகே" என்று தலையாட்டிய ஆன்ட்டியின் முகத்தில் கோடிப் புன்னகை.

"நாளை அதிகாலையில் சர்ஜரி" என்று சொல்லவும் புன்னகை பன்மடங்காயிற்று.

வெளியில் வந்ததும் ரிசப்ஷனில் இருந்த டெக்னீஷியனிடம் கேட்டேன் :

"முரண்பாடாய் இருக்கிற அவயவத்தை இயல்பாக மாற்றி சர்ஜரியைச் செய்ய வேண்டியதுதானே? இதற்கு நம் விருப்பத்தைக் கேட்டு படமெல்லாம் வரைய வேண்டுமா?" என்ற என் கேள்விக்கு டெக்னீஷியன் சொன்ன பதில் திகைப்பைத் தந்தது.

"முரண்பட்ட உடலுறுப்பை முறைப்படி மாற்றி அமைக்க சர்ஜரி பயன்பட்டதெல்லாம் ஆரம்ப காலத்தில். இப்போதெல்லாம் சதுர முகம், செவ்வகக் காது, குத்தினால் ரத்தம் வருகிற மூக்கு என்று மனம் போனபடி மாற்றி அமைக்கச் சொல்கிறார்கள். அதனால்தான் உங்கள் விருப்பத்துக்கே விட்டு விடுகிறோம். நீங்கள் வரைந்து கொடுத்த படத்தில் மில்லி மீட்டர் பிசகாது. இந்த வகையில் டாக்டர் பெல்லி உலகின் நம்பர் ஒன்" என்றார் டெக்னீஷியன்.

விஞ்ஞானத்தின் எதிர்த்திசை பயணத்தை எண்ணி நொந்து கொண்டேன்.

இன்று ஆன்ட்டிக்கு டிஸ்சார்ஜ்.

இன்னும் கால் மணி நேரத்தில், காதைச் சூழ்ந்திருக்கும் காட்டன் அகற்றப்பட்டு, ஆன்ட்டியின் காதுகள் உலகக் காது வரிசையில் சேர்ந்து விடும். காது பெருத்த காஞ்சனமாலா என்று கிண்டலடித்தவர்களின் வாய் பூட்டப்படும்.

ஆன்ட்டியைப் பார்க்க சுற்றமும் நட்பும் சூழ வந்திருந்தார்கள்.



"டாக்டர் என்னோட கால்ல மூள் குத்திடிச்சு!"
"அப்படியா! இந்தாங்க சி.டி. ஸ்கேன், எக்கோ, எண்ட்ராஸ்கோப் எல்லாம் எழுதியிருக்கேன். போய் எடுத்திட்டு வந்திடுங்க!"
– புளியரை கணேசன்

சும்மா இருக்க மாட்டாமல், ஆன்ட்டியின் தலைக்கு மேல் தொங்கிய சார்ட்டை எடுத்துப் பார்த்தேன். ஆன்ட்டி வரைந்து கொடுத்த காது படம் இணைக்கப்பட்டிருந்தது.

படத்தைப் பார்த்ததும் திடுக்கிட்டுப் போய் மீண்டும் பார்த்தேன்...

– அதிர்ச்சி!

நடந்து விட்ட தவறு மெல்ல தெரிய வந்ததும் கை லேசாக நடுங்கியது...

ஆம்!

ஆன்ட்டிதான், ஆர்வத்தில், அந்த தவறைச் செய்து விட்டிருந்தாள்...

படத்தை சரியாகப் பார்க்காமல், காதை தலைகீழாக வைத்து சர்ஜரிக்கான பகுதியை குறிப்பிடப் போக –

நீக்கப்பட வேண்டிய காதின் கீழ்ப்பகுதி சிரித்துக் கொண்டிருக்க, அவசியமான மேல் பகுதி வெட்டி நீக்கப்பட்டிருந்தது!

# காவிரிக் கரையில் கால் ஏக்கர் நிலம், முதலீட்டாளர்களுக்கு காய்கறி இலவசம்



## தொடர்ந்து 7 ஆண்டுகளுக்கு
## ஒவ்வொரு 7 நாட்களுக்கு ஒருமுறை
## உங்களுக்கு 7 கிலோ காய்கறி தர

## வருகிறான்

# காய்கறிகாரன்

- விலைவாசி ஏற்றத்தின் பாதிப்பின்றி நீங்கள் விரும்பும் 7கிலோ காய்கறிகள் உங்கள் இல்லம் தேடி இலவசமாக வருகிறது. அல்லது விவசாய வருமானமாக ஆண்டுக்கு ரூ. 3000/- முன் தேதியிட்ட காசோலையாக வழங்கப்படும்.
- கால் ஏக்கர் நிலத்தை 7 வருடங்களுக்குப்பிறகு வீட்டுமனைகளாக நல்ல விலைக்கு விற்கலாம்.
- முதலீட்டிற்கு சிறந்த வருமானம் - வருமான வரி விலக்கு உண்டு.

## முதலீட்டுத் திட்ட விவரம்

| திட்டம் 'A' சுலப தவணைத்திட்டம் | திட்டம் 'B' குறுகிய தவணைத்திட்டம் | திட்டம் 'C' * ஒரே தவணைத்திட்டம் |
|---|---|---|
| முன்பணம் ரூ. 3,500/- | முன்பணம் ரூ. 11,800 | ஒரே தவணை |
| மாதத் தவணை ரூ. 2,675/- | மாதத்தவணை ரூ. 11,000 | ரூ. 32,900/- |
| மாதங்கள் 12 | மாதங்கள் 2 | |

* B மற்றும் C திட்டத்தில் சேருபவர்களுக்கு உடனடியாக காய்கறி வழங்கப்படும். பதிவுக் கட்டணமாக ரூ. 2,500/- கூடுதலாக செலுத்த வேண்டும்.




**B K எஸ்டேட்ஸ்**
109, நுங்கம்பாக்கம் நெடுஞ்சாலை
நுங்கம்பாக்கம், சென்னை 600 034
தொ.பேசி 8266978, 8277234
பேக்ஸ் : 91-044-8282792




கிளை : A-3, S V V காம்ப்ளக்ஸ், 9,சாஸ்திரி சாலை,
தில்லை நகர், திருச்சி - 620 017. போன் : 33076.

**சிறப்பு பரிசு!**

ஆகஸ்ட் 1 முதல் 31 தேதிக்குள் எங்கள் B&C திட்டங்களில் சேரும் முதல் 100 நபர்களுக்கு ரூ.1,400/- மதிப்புள்ள காபி மேக்கர் அன்பளிப்பாக தரப்படும்.

JEGI/BKE/3296

"**நா**ன் ஒரு நாராயண பக்தனுங்க..." என்று சொல்லும் பிரகாஷ், திருப்பதி சென்று மொட்டை போட்டுக் கொண்டு, அப்போதுதான் திரும்பியிருந்தார்.

பிரகாஷ்?

கடந்த ஆறேழு மாதங்களாக செய்தித் தாள்களில் அதிகமாக அடிபடும் பெயர். சசிகலா அண்ட் கோ வழக்குகளில் அமலாக்கப் பிரிவு சார்பாக வாதாடும் வக்கீல்.

"வழக்கின் தன்மையை நன்கு புரிந்து கொண்டு, நுணுக்கமான சட்ட அறிவு + சமயோசிதம், இவற்றின் துணையோடு, வாதாடினால் எப்படிப்பட்ட வழக்கிலும் வெற்றிக் கொடி நாட்ட முடியும்" என்று சொல்லும் பிரகாஷுக்கு வயது 42. பதினேழு வருட அனுபவம்.

சொந்த ஊர் திண்டுக்கல் அருகிலுள்ள சின்னாளப்பட்டி. (புடைவைகளுக்குப் புகழ்பெற்ற அதே ஊர்தான்) அப்பா சுப்பிரமணியத்துக்குச் சென்னையிலும், நெல்லூரிலும் துணி மொத்த வியாபாரம். மூத்த மகன்



# சட்டத்தின் பிடியிலிருந்து தப்ப முடியாது சசிகலா அண்ட் கோ!

இவர்; கொஞ்சம் அதிகமாகவே உடன் பிறப்புகள்.

"ஏழு வயது வரை சென்னையில்தான் இருந்தேன். பின்னர் சொந்த ஊருக்குச் சென்று உயர்நிலைப் பள்ளி படிப்பை முடித்து விட்டு, மறுபடியும் சென்னை வந்து பச்சையப்பாவில் பி.யு.சி. சேர்ந்தேன். எம்.ஏ. வரை அங்கேயேதான். அதன்பின் சென்னை சட்டக் கல்லூரி. பச்சையப் பாவில் படிக்கும் போது என் வகுப்புத் தோழர் வேணா தமிழ்வாணன். கொஞ்சம் சீனியர் வைரமுத்து...." என்று சொல்லும் பிரகாஷ், அந்தக் காலகட்டத்தில் ஸ்டிரைக், மறியல், போராட்டம் போன்ற எதிலும் கலந்து கொள்ளாமல் படிப்பு ஒன்றிலேயே கவனம் செலுத்தி இருந்திருக்கிறார்.

சட்டம் படித்த பின் பிரபல கிரிமினல் வழக்கறிஞர் என். நடராஜனிடம் ஜூனியராகச் சேர்ந்தார் பிரகாஷ். இப்போது அரசு வழக்கறிஞராக உள்ள சண்முகசுந்தரம் (தாக்கப்பட்டாரே அவர் தான்) பிரகாஷுக்குத் தோழரானது அங்கேதான்.

"சுமார் ஐந்து வருட காலம் நடராஜன் அவர்களிடம் பணிபுரிந்தேன். பின்பு தனியாக பிராக்டீஸ் செய்யத் துவங்கி னேன். கிரிமினல் வழக்குகளை விட, 'ஒயிட்காலர் குற்றங்கள்' என்று சொல்லப் படும் பொருளாதார வழக்குகளில் எனக்கு மிக்க ஆர்வம் இருந்தது. கஸ்டம்ஸ், சென்ட்ரல் எக்ஸைஸ், அமுலாக்கப் பிரிவு ஆகியவற்றின் ஸ்பெஷல் பப்ளிக் பிரா



''எடுக்கிறது பிச்சை, இதிலே கௌரவத்தைப் பாரு!''

''என்னாச்சு?''

''கண்டக்டருக்கு வேணும்னா அஞ்சி... பத்துக் காசு வுட்டு குடுப் பீங்க... எங்களுக்குத் தர்மம் பண்ணா மட்டும் என்ன குறைஞ்சா போயிடு விங்கன்னு கேட்கிறான்!''

– நரேந்திரன்

சிக்யூட்டராக வருவதற்கு முன்னர், இந்தத் துறைகளை எதிர்த்தே நான் வழக்காடியிருக் கிறேன்! என்றாலும், இப்போது நான் செய்து வரும் பணி, எனக்கு மிகுந்த மனநிறைவைத் தருகிறது'' என்கிற பிரகாஷுக்கு திருமணமாகி ஒரு பையன், இரண்டு பெண்கள்; மனைவி : சாரதா.

''அ.தி.மு.க.வினரிடமிருந்து உங்களுக்கு நிறைய மிரட்டல்கள் வந்திருக்குமே?''

''நான் இப்போதுதான் இந்தப் பகுதி (சூளை)க்கு வந்துள்ளேன். அ.தி.மு.க. ஆட்சியின் போது மண்ணடியில் இருந் தேன். 'டேய், உன்னை என்ன பண்றேன் பாரு... ஆட்டோவிலும், லாரியிலும் ஆட்கள் வராங்க' என்றெல்லாம் தொலைபேசியில் மிரட்டல்கள் வந்த துண்டு. பாதுகாப்புக் கருதி சில இரவுகள் தலை மறைவானதும் உண்டு. ஆனால் இப்போது எதுவும் கிடையாது. நமக்கு யாரும் எதிரி கிடையாது. என்னோட கடமையை நான் செய்கிறேன் அவ்வளவு தான். பாதுகாப்புக்கு ஆட்கள் வைத்துக் கொள்வதில் எனக்கு நம்பிக்கை கிடையாது'' என்கிறார்.

அமலாக்கப் பிரிவைப் பொறுத்தமட்டில், பொருளாதார மாஜிஸ்திரேட் கோர்ட், மற்றும் பிரின்சிபல் செஷன்ஸ் கோர்ட் ஆகியவற்றில் பிரகாஷ்தான் ஆஜராகிறார். நேரம் கிடைக்கும் போது தமிழில் உள்ள தத்துவப் புத்தகங்களைப் படிக்கிறார். ஒரு காலத்தில் எம்.ஜி.ஆர். ரசிகராக இருந்தவர், இப்போது ரஜினி ரசிகராக மாறியிருக்கிறார்.

எத்தனை சம்மன்கள் அனுப்பினாலும், டபாய்த்துக் கொண்டிருந்த போக்கைத் தடுத்து நிறுத்த, 'சம்மனுக்கு ஆஜராகாமல் இருப்பதே குற்றம்' என்று வழக்குத் தொடுக்கும் சாணக்கியம், பிரகாஷின் மூளையில் உருவானதுதான்!

''பல பொருளாதார வழக்குகளை நடத்தியிருந்தாலும், முனுசாமி என்கிற நபருக்காக நடத்திய வழக்கு குறிப்பிடத்தக்கது. சிங்கப்பூரில் சாதாரண வேலை செய்த முனுசாமி சென்னைக்குத் திரும்பும் போது, அவரைத் தாஜா செய்து, அவருக்குத் தெரியாமல் தங்கம், வி.சி.ஆர். போன்றவற்றை அவர் பெட்டியில் வைத்து அனுப்பி விட்டார்கள். சென்னையில் மாட்டிக் கொண்டார் முனுசாமி. பிறகு அவர் நிரபராதி என்பதை கோர்ட்டில் நிரூபித்து, விடுதலை பெற்றுத் தந்தேன். வெளிநாட்டிலிருந்து திரும்புகிறவர்கள் கள்ளக் கடத்தல் கும்பல்களிடம் ஜாக்கிரதையாக இருக்க வேண்டும்!'' என்கிறார் பிரகாஷ்.

சென்னை அமுலாக்கப் பிரிவைப் பொறுத்தமட்டில், அவ்வப்போது பர்மா பஜார் வியாபாரிகளும், சிறு தொழில் அதிபர்களும் மாட்டிக் கொண்டாலும் மிகப் பெரிய அளவில், மோசடி நடந்து 'பலே' பிரமுகர்கள் மாட்டிக் கொண்டது இப்போதுதானாம்.

''இப்போது வழக்குகள் இருக்கிற நிலையில், அரசியல் சூழ்நிலைகள் மாறினாலும் சட்டத்தின் பிடியிலிருந்து சம்பந்தப்பட்டவர்கள் தப்ப முடியாது'' என்று அழுத்தமாகச் சொல்கிறார் பிரகாஷ்.

சந்திப்பு : **தில்லப்பா**

வண்ணப்படம் : **பேஜர் கே. மூர்த்தி**



''ஏகாம்பரம் எழுதிய நாவலை பத்துப் பக்கமாவது படிக்கணும்; ஆனா உங்க நாவலை ரெண்டு பக்கம் படிச்சாலே போதும், நல்ல பலன் கிடைக்குதுன்னு சொல்றாங்க...''

''ஹி ஹி ரொம்ப சந்தோஷம்; யாரு அப்படி சொல்றாங்க, டாக்டர்?''

''தூக்கம் வராம சிரமப்படற என் நோயாளிங்க!''

– பாஸு



# செய்திகள், வாசிப்பது செம்பியன்...

ஜெயலலிதா மறுபடி நாவல் எழுத ஆரம்பித்திருக்கிறார்! லயோலா கல்லூரி வாசலில் நடந்த துப்பாக்கி சூடுக்கு ஒரு பின்னணியை சிருஷ்டித்து அவர் விடுத்துள்ள அறிக்கை அதை நிரூபிக்கிறது. ஆனால், ஒரு நாவலாசிரியை என்ற முறையில் கூட அவர் நல்ல பெயர் எடுக்கப் போவதில்லை என்பதுதான் பரிதாபம்!

"குண்டர்கள் ராஜ்யத்துக்கு இடம்தர மாட்டோம்; துப்பாக்கி பேசும்" என்று கூறியிருக்கிறார் முதல்வர். போலீஸார் நடத்தியும் காட்டியிருக்கிறார்கள். கொலை, கடத்தல், பிளாக்மெயில் வழக்குகளில் தேடப்பட்டு வந்தவர்களை லயோலா கல்லூரி வாசலில் தந்திரமாக மடக்கி, சுட்டு வீழ்த்தி இருக்கிறார்கள். ஓரிரு குண்டர்கள் தப்பி ஓடியும் விட்டார்கள். போலீஸ் தரப்பிலும் காயம்பட்டவர் உண்டு. வீரத்தை வாழ்த்த வேண்டும்தான். ஆனால் இதிலே ஓரளவு அதிர்ஷ்டமும் வேண்டும். யுத்தத்தினிடையில் எதிர்பாராத விதமாக அடிபட்டு சிகிச்சை பெற்று வரும் கல்லூரி மாணவருக்கு நடக்கக் கூடாதது ஏதும் நடந்திருந்தால் இதற்குள் எதிர்ப்புக் குரல்களும் ஒலித்திருக்கும். 'போலீஸ் அலட்சியம், அராஜகம்' என்று குற்றச்சாட்டுகளும் பிறந்திருக்கும். மிகுந்த எச்சரிக்கை தேவை. இன்னும் ஒன்று : கமிஷ்னர் சார், மாருதி ஒரு சுட்ட அப்பளாம் மாடல். அம்பாஸிடரை மோதி மடக்க மகேந்திரா ஜீப்பைப் பயன்படுத்துங்க, ப்ளீஸ்!

வாதங்களில் சிறப்பானவையும் உண்டு; படுமோசமானவையும் இருக்கு. மேல்சபை அமைய வேண்டியது அவசியம் என்பதற்காக சட்டமன்றத்தில் ஒலித்த வாதங்களில் த.மா.கா. சொக்கர் சொன்னது சத்தானது. 'சட்டமன்ற விவாதத்துக்குப் பிறகு மேல்சபை தலையிட்டது, பதினாலு தருணங்களில்; அவற்றில் பன்னிரண்டு தடவைகளில் மேல்சபையின் யோசனைகளை சட்டமன்றம் ஏற்றுள்ளது' என்றார். வலிமை சேர்க்கும் புள்ளி விவரம்.

இனி சொத்தை வாதம் : 'இந்திரகுமாரி ஒரு பெண் என்பதால் நீதிபதி அவரை ஜாமீனில் விடுவிக்க முன்வரவாம்' என்ற வழக்குரைஞரின் கருத்து. ஒரு பெண் என்பதால் இ.குமாரி அரசியலில் புகாமலிருந்தாரா? கட்சி தாவாமலிருந்தாரா? காக்காய் பிடித்து பதவியில் அமராமலிருந்தாரா? ஊழல் பண்ணாமலிருந்தாரா? அல்லது கைதாகாமல்தான் இருந்தாரா? ஜாமீனில் விட மட்டும் பெண் என்ற வாதம் எதற்கு? நல்லவேளை, நீதிபதி இந்த அபத்த வாதத்தை ஏற்கவில்லை. ஜாமீனில் விடுவிக்கவும் இல்லை!

நாடக பாணியில் அறிவிப்பு செய்வதில் கலைஞர் கெட்டிக்காரர். 'தமிழகத்தில் உள்ள பல்வேறு மருத்துவமனைகளில் 500 ஆம்புலன்ஸ்களும் பழசாகி, பழுதாகி நிற்கின்றன; புதுசு வாங்க 18 கோடி செலவாகும்' என்று ஆர்க்காடு வீராசாமி ஒரு குரல் அழ, 'டாம்பீகத்துக்காக ஜெ. வாங்கிய சொகுசு விமானத்தை விற்றால் 20 கோடி கிடைக்கும்; எடுத்துக் கொள்ளுங்கள்' என்று ஆரவார வரவேற்பினிடையே சட்டமன்றத்தில் அறிவித்தார் முதல்வர். மேல்நாடுகளில் இப்போதெல்லாம் ஹெலிகாப்டர்களே ஆம்புலன்ஸ்களாக இயங்குகின்றன. எமெர்ஜென்ஸி ஆபரேஷன் நடத்தக்கூடிய அளவில் சகல வசதிகளுடன் விமான ஆஸ்பத்திரிகள் செயல்படுகின்றன. இங்கே நாம் விமானம் விற்று ஆம்புலன்ஸ் வாங்கப் போகிறோம். ஹும், விரலுக்குத் தக்க வீக்கம்!

# உன்னை

## சென்ற வாரம்....

சுசி என்கிற கன்யா –

ஒரு தனியார் நிறுவனத்தின் கல்கத்தா கிளையிலிருந்து சென்னைக்கு மாற்றலாகி வந்து, தன்னோடு பணியாற்றும் ஸ்ரீராமைக் காதலிக்கிறாள். அவர்கள் திருமணத்துக்கு முக்கியத் தடை – ஸ்ரீராமின் தங்கை வசந்தி. கல்லூரியில் படிக்கிற அவளுக்குத் திருமணமானபின்தான் தன் காதல் விஷயத்தை வீட்டில் பேசமுடியும் என்கிறான் ஸ்ரீராம். ஒரு ஞாயிற்றுக் கிழமை, இருவரும் தம் முதலாளி ராஜுவின் நீலாங்கரை வீட்டுக்குப் போகிறார்கள். அலுவலக விஷயமாக. இருவரும் காரில் திரும்பி வருகையில் ஒரு டூரிஸ்ட் பஸ் அவர்களைக் கடந்து போகிறது. இவர்களின் 'நெருக்க'த்தைப் பார்த்துக் கிண்டலடித்துக் கொண்டு போகிற அந்த இளம் கல்லூரிப் பெண்களின் முகங்களில் ஒரு முகம் மட்டும் அந்தக் காட்சியைக் கண்டு அதிர்ச்சி அடைகிறது.

அது –

ஸ்ரீராமின் தங்கை வசந்தியின் முகம்.

இனி.....

2

பளபளக்கும் புது மாருதி தவுஸண்ட், அழுது வடிந்த இரும்பு கேட்டின் முன் நின்றது. அந்த முரண்பாடு ஸ்ரீராமிடம் வழக்கமான புன்னகையை வரவழைத்தது. மொத்த வீடுமே பெயிண்ட் உதிர்ந்து பரிதாபமாய்த் தெரிந்தது. இரண்டு வருஷங்களாகச் சொல்லிப் பார்த்தாயிற்று...

"வசந்தி கல்யாணத்தப்போ பார்த்துக்கலாம். இப்போ செலவு வைக்காதே... கவரும், கேட்டுமா முக்கியம்...?" கவலையான பதில் தான் வரும்.

விட்டிருந்தால் பதினாறு வயதிலேயே வசந்தியை மணமகளாக்கியிருப்பார்கள். 'படிக்கட்டும்' என்று அழுத்தமாய்ச் சொல்லி கடிவாளம் போட்டவன் இவன்தான். மூர்க்கமாய் மறுக்காமல் அப்பாவும், அம்மாவும் ஒப்புக் கொண்டார்கள் என்றால், அதற்கு அவன் வாங்கிய பத்தாயிரத்து சொச்சம் ஆரம்பச் சம்பளமும் ஒரு காரணம்.

காரை நிறுத்திவிட்டு இறங்குவதற்கு முன் அம்மா புடைவைத் தலைப்பைச் செருகியபடி ஓடி வந்தாள்.

"ஸ்ரீராமா, அப்படியே போய் வசந்தியை காலேஜ்லேயிருந்து அழைச்சுண்டு வந்துடு... மகாபலிபுரம் பிக்னிக் போய்ட்டு வந்து காத்திருப்பா குழந்தை. குமாரைப் போகச் சொல்லியிருந்தேன் – இப்பத்தான் அவன் போன் பண்றான் – அவசரமா 'ஓ' பாஸிடிவ் யாருக்கோ வேணுமாம் – அப்போலோ போக வேண்டியிருக்குன்னு... உங்கப்பாகிட்டே சொன்னா..."

"கத்துவார்! சரி சரி, போறேன்." ரிவர்ஸ் கியர் மாற்றி, வெளியேறி, கோடம்பாக்கம் நோக்கிப் போய், பத்தாவது நிமிடம் கல்லூரிக்குள் நுழைந்தான்.

அனேகமாய் எல்லாப் பெண்களும் போய் விட்டிருந்தனர். மிச்சமிருந்த மூவருக்குத் துணையாக ஒரு பேராசிரியை மட்டும் முன் மேல் நிற்கும் தவிப்புடன் காவலிருந்தார்.

இவன் காரைப் பார்த்துவிட்டு விடைபெற்று வந்த வசந்தியின் நடையே வித்தியாசமாய்த் தெரிந்தது.



திறந்து வைத்த முன் பக்கத்தில் ஏறாமல் பின்னால் உட்கார்ந்து கதவை அறைந்து மூடினான்.

"என்னாச்சு உனக்கு...?"

"போகலாம்..."

கல்லூரியை விட்டு கார் வெளியேறியதுமே பின் சீட்டில் விசும்பல் நிறைந்தது.

''வசந்தி, என்னம்மா...? ஏன் அழறே...?" – விசும்பல் கேவலாயிற்று.

ரியர் வியூ மிர்ரர் வழியே தங்கையை கவனிக்க முயன்றான், ஸ்ரீராம். பொழுது சாய்ந்து இருட்டிப் போயிருந்தது.

இது என்ன சங்கடம்! சொல்லிவிட்டு அழுது தொலைக்கக் கூடாதோ...? மனத்துக்குள் சலிப்பு வந்தது – இந்த சலிப்புக் கூட சமீபத்திய குணம்தான். சுகியுடன் நெருக்கமான பிறகு, அவளின் வலுவையும் தன்னம்பிக்கையையும் புரிந்து கொண்ட பிறகு, வீட்டுப் பெண்களின் பலவீனமும் பதறலும் எரிச்சலூட்டுகின்றன.

தப்பு! தப்பு! என்று மானசிகமாய்க் கன்னத்தில் போட்டுக் கொண்டு, "வசந்தி, அழாதேம்மா... எதுவானாலும் வீட்டுக்குப் போய் பேசிக்கலாம்..." என்றான்.

"யாரு அவ...? சினிமா மாதிரி தோள்ல சாஞ்சுண்டு...? அழுகையுடன் கலந்து வார்த்தைகள் வந்தன.

ஒருகணம் திகைத்தான்.

ஈஞ்சம்பாக்கத்திலிருந்து திரும்பும் போது ஓவர்டேக் செய்த டூரிஸ்ட் பஸ், அதிலிருந்து வெளிப்பட்ட மாணவக் கூக்குரல்கள்...

"சொல்றேன்..."

பாலகுமாரன்

?

**தங்க நகைப் பரிசு!**

இன்னும் 24 வாரங்கள் வெளிவரப் போகிற இந்தத் தொடர்கதை, வாராவாரம் ஓர் எழுத்தாளரின் பெயரில் வெளியாகும். ஆனால் முழுக்கதையையும் எழுதுபவர் ஒரே எழுத்தாளர்தான்! யார் அவர்?

வாரா வாரம் படித்து, யூகித்துக் கொண்டே இருங்கள். கடைசி வார அத்தியாயத்துடன் வெளியாகப் போகிற கூப்பனில், 'தொடரை எழுதியவர் யார்?' என்கிற உங்கள் யூகத்தை எழுதி அனுப்புங்கள்.

உங்கள் யூகம் சரியானதாக இருந்தால் உங்களுக்குத்தான் மின்னும் தங்க நகைப் பரிசு!

பலர் சரியான விடை எழுதியிருந்தால் குலுக்கல் முறையில் ஓர் அதிர்ஷ்டசாலி தேர்ந்தெடுக்கப்படுவார். ஆசிரியர் தீர்ப்பே இறுதி.

"எல்லாவற்றையும் சொல்லி விட வேண்டியதுதான்."

வீட்டை நெருங்கியிருந்தார்கள். கேட்டைத் திறந்து விறுவிறுவென்று வாசற்படி ஏறிய வசந்தி, நின்றாள். கதவு பூட்டியிருந்தது. ஸ்ரீராம் மாற்றுச் சாவி எடுத்துத் திறக்க,

நாதாங்கியில் துண்டுக் காகிதம். 'அப்பாவும் நானும் திருவல்லிக்கேணி கோவிலுக்குப் போகிறோம். வர ஒன்பதாயிடும். ஸ்ரீராமுக்குச் சூடாக தோசை வார்த்துக் கொடு.'

- அம்மாவின் கையெழுத்தில் அன்றைய மாலைக்கான ஆணைகள்.

'அப்பாடி! வசந்தியைச் சரிக்கட்ட முழுசாக இரண்டு மணி நேரம் - அந்தப் பார்த்தசாரதி பெருமான் அருளால் கிடைத்திருக்கிறது...'

முன் அறை சோபாவில் முழங்கால்களை மடக்கி, தலையைப் புதைத்துக் குலுங்கிக் கொண்டிருந்தாள்.

மென்ன தலையை வருடிச் சொன்னான்.

"போய் முகம், கை-கால் அலம்பிண்டு வா. எல்லாத்தையும் சொல்றேன்."

எழுந்து போனாள்.

எப்படி ஆரம்பிப்பது? என்னத்தைச் சொல்வது...? ஆரம்பத்திலிருந்தே ஆரம்பிப்பது என்று முடிவு செய்தான்.

"சுகன்யா அவ பேரு... சுகின்னு கூப்பிடுவோம். எங்க ஆபீஸ்ல கம்யூனிகேஷன்ஸ் மானேஜரா இருக்கா. அப்பா, அம்மா, கூடப் பிறந்தவங்க கிடையாது..."

"அதான் இப்படி வெட்கங்கெட்டு ஒட்டிண்டு உட்கார்ந்திருந்தாளா... அப்பா, அம்மா இருந்தா ஒழுங்கா வளர்த்திருப்பா!"

"வசந்தி ப்ளீஸ்! வார்த்தையால கொட்டித் தீர்க்கறியே..."

"அவளைச் சொன்னா உனக்கு ஏன் கோபம் வருது...?"

"அப்படித்தான் வரும்! என்னா நீ எதைத் தப்பு, கேவலம்னு நினைக்கறியோ, அதை நானும் சேர்ந்துதான் செஞ்சிருக்கிறேன். எனக்கு அப்பா, அம்மா இல்லையா? நீ இல்லையா? குமார் இல்லையா...?"

"அதானே! இவ்வளவு பேர் இருந்தும் நாங்க யாரும் உனக்கு முக்கியமாத் தோணலை... எல்லாரையும் ஏமாத்தியிருக்கே..."

"ஐயோ, வசந்தி! ஏமாத்தணும்னு நான் நினைக்கலை! சத்தியமா சுகியும் நினைக்கலை... அவ அப்பா தமிழர்; அம்மா பெங்காலி... அது தெரிஞ்சா நம்ம அப்பாவும் அம்மாவும் எப்படி ரியாக்ட் பண்ணுவாங்கன்னு உனக்குத் தெரியாதா?"

"உனக்கு மட்டும் தெரியாதா...? அப்புறம் ஏன் இப்படி...? கார்ல... சீ சொல்லவே வெட்கமாயிருக்கு..."

"இந்த மாதிரி ஃபீலிங்கெல்லாம் குலம் கோத்திரத்தை விசாரிச்சுத் தெரிஞ்சுண்டு வராது... ஆனால் வந்துடுத்துனா கூடவே..."

"கூடவே...?"

"ஒண்ணுமில்லை..."

'காதல் வந்தால் கூடவே களிப்பு வரும்; அது கைப்பற்றுதலுக்கும் தோள் சாய்தலுக்கும் தடம் அமைக்கும். அடுத்த கட்டம் என்னவென்று அறியாமல் திட்டமிடாமல் நிகழும்' என்றெல்லாம் பத்து வயது இளைய தங்கைக்குப் பாடம் நடத்த முடியுமா...

ஸ்ரீராம் அவள் அறிவுக்கு மனு போட்டுப் பார்த்தான்.

"இதோ பாரு வசந்தி, காதல்ங்கிறது அசிங்கமான விஷயம் கிடையாது. ரொம்ப இயல்பான நிகழ்ச்சி! யாருக்கு வேண்டுமானாலும் ஏற்படலாம். ஏன்...? நாளைக்கு உனக்கே கூட..."

"மூடு வாயை...!"

"ஸ்தம்பிச்சுப் போயிட்டேன் சுகி... சில நிமிஷங்களுக்கு என்னால நிஜமாகவே பேச முடியலை. இவ்வளவு வருஷத்துல நான் வசந்திகிட்ட இப்படியொரு சொல் கேட்டது கிடையாது."

"எனக்கு அது ஆச்சரியமாவே தோணலை ராம்..." டீயை உறிஞ்சிக் குடித்தபடி சொன்னாள்.

புதிர் போல் அவள் முகத்தைப் பார்த்தான்.

"சுயமா யோசிக்க விடாம, இதிது சரி, இதிது தப்புன்னு உயரமா சுவர் எழுப்பி,

அதைத் தாண்டவிடாம பண்ணியிருக்கிங்க. இயற்கையிலேயே பயந்த சுபாவம். அதனால சுவத்துல ஒட்டை போட்டு, 'தப்பு' பக்கம் எட்டிப் பார்க்கற இயல்பான, வயசுக்குரிய குறுகுறுப்பு கூட இல்லை. கோழிக் குஞ்சைப் போல பதுக்கிப் பதுக்கி வளர்த்தா இப்படித் தான்..."

சுகன்யாவின் கண்களில் மின்னலடித்த கோபத்தை ரசித்தான்.

"சரி நாங்கதான் சரியா வளர்க்கலை, பட்டிக்காடு... நமக்குப் பொறக்கற குழந்தை களையாவது நீ..." சொல்ல ஆரம்பித்தவன் திடீரென்று கூச்சத்தில் மௌனமாகிப் போய் தலைகுனிந்து காலிக் கோப்பையை ஆராய்ந் தான்.

"பார்த்தியா! இப்ப நீயே வெட்கப்படறே. சரி, நாம எவ்வளவு குழந்தைங்க பெத்துக் கலாம்? மூணு? நாலு? அஞ்சு...?"

அவன் விரல்களைப் பிரித்து, குதூகலமாய் எண்ண ஆரம்பித்தாள்.

"ஷ்! காலியா இருந்தாலும் இது பொது இடம்..."

'சாட்ஸ் அண்ட் சாய்' என்ற ரெஸ்டா ரண்டில் இருந்தார்கள். 'கல்கத்தா மாதிரி வராது' என்றபடியே சுகன்யா பானி பூரியும் பாப்டி சாட்டும் விரும்பிச் சாப்பிடும் இடம். டீயைக் கொதிக்க கொதிக்க அவனும், ஊதி ஊதி ஆறவைத்து அவளும் ருசிக்கும் மிதமான விலைப்பட்டியல் கொண்ட உணவு விடுதி.

"இதைச் சாக்கா வைச்சு நீ எல்லாத்தையும் திறந்து அப்பா, அம்மாகிட்டே சொல்லி யிருக்கணும் ஸ்ரீராம்! ஒரு நல்ல சந்தர்ப்பத்தைத் தவற விட்டுட்டே..."

"இல்லை சுகி! இந்த விஷயம் தெரிஞ்சா அப்பா எப்படி ரியாக்ட் பண்ணுவார்னே சொல்ல முடியாது. இதுனால வசந்தி கல்யாணம் பாதிக்காம இருக்கணுமேன்றது தான் என் முக்கியமான கவலை. அதனாலே தான் அவகிட்டே வாக்குறுதி வாங்கிண்டேன். இது விஷயமா ஒண்ணும் பேசக்கூடாதுன்னு..."

"எப்படி ஒத்துக்கிட்டா...?"

"ராமரும் சீதையும் நேசிக்கலையா? கண்ணனும் ராதையும் காதலிக்கலையா? வள்ளி திருமணம் கதையைக் கேட்டு எவ்வளவு ரசிச்சிருக்கே...? அப்படின்னு புராணங்கள்ல தஞ்சமாயிட்டேன்..."

"அடக் கடவுளே!"

"கடைசியில கடவுள்தான் காப்பாத்தினார். அவளுக்கு தெய்வபக்தி ஜாஸ்தி. இதையெல் லாம் சொன்னதும், யோசிக்க ஆரம்பிச்சா..."

"நீயொரு ஃப்ராடு ஸ்ரீராம்! காதலிக்க ஆரம் பிச்சப்போ ராமனையும் கிருஷ்ணனையும் நினைச்சு உன்னை நியாயப்படுத்திக்கிட்டியா...? இல்லை," முருகன் வள்ளி கையைப் புடிச்ச



"ஒரு எல்லை வரைக்கும்தான் கவர்ச் சியா நடிப்பேன்னு சொல்றீங்களே, எது வரைக்கும் கவர்ச்சியா நடிப்பீங்க?"
"இந்திய எல்லை வரைக்கும்தான்!"
– ரமேஷ்ராமன்

மாதிரி திடீர்னு என் கையைப் புடிச்சியா... உன் சௌகரியத்துக்குப் புராணங்களை யெல்லாம் இழுத்து வளைச்சு இப்ப வசந்தியை ஏமாத்தியிருக்கே!"

"சும்மா விதண்டாவாதமா பேசாதே. அவளுக்குப் புரியற லெவல்லதானே நான் விளக்க முடியும்? உன்னை மாதிரி கிப்ராணை யும் ஷெல்லியையும் ஷேக்ஸ்பியரையும் படிச்சு வளர்ந்தவ இல்லையே அவ...? அது சரி, உனக்கு எப்படி வள்ளி திருமணம் கதை தெரியும்...?"

"அப்பாதான் சொல்லியிருக்கார். நீ சொல்ற மாதிரி எனக்கு ஷெல்லியும் ஷேக்ஸ் பியரும் படிச்சு காதல்ல ருசி வரலை. அதுக்கு முன்னாடியே, ஏழு வயசுல அப்பா சொன்ன கதைகளைக் கேட்டே என் ராஜகுமாரனைத் தேட ஆரம்பிச்சுட்டேன். யூ நோ... ஒரு கட்டத் துல அப்படி ஒருத்தன் கிடைக்கவே மாட் டான்னு எனக்கு அவநம்பிக்கையே வந்து டுத்து..."

"அப்புறம்...?"

"அப்புறம் விழுப்புரம்!"

– சுகன்யா தன்னைப் போலவே கிண்ட லாய் பதில் சொன்னதும் சிரித்தான்.

"கடைசில நான்தான் ஜெயிச்சிருக்கேன். ஸ்ரீராம்..." என்றாள்.

"என்ன சொல்றே...?"

"வசந்தி கல்யாணத்துக்கு நான் வருங்கால அண்ணியாத்தான் வரப் போறேன். உங்க அப்பா, அம்மாக்கெல்லாம் தெரியாட்டாலும் அவ வரைக்குமாவது தெரியுமில்லையா...?"

"மன்னி..." ரகசியமாக உச்சரித்துப் பார்த்துக் கொண்டாள் வசந்தி. அவள் மனத் திலிருந்த கற்பனை பிம்பத்துக்கும் காரில் பார்த்த தலைவிரி கோலப் பெண்ணுக்கும் ஏணி வைத்தாலும் எட்டாது.



"இண்டர்வியூல இவ்வளவு ஈஸியா கேள்வி கேட்பீங்கன்னு எதிர்பார்க்கலே சார்..."

"எப்படியும் உங்களுக்கு வேலை கொடுக்கப் போறது இல்லே. இண்டர்வியூலயாவது சந்தோஷத்தைக் கொடுக்கலாமேன்னுதான்!"

— எஸ்.எஸ். பூங்கதிர்

'எப்படி மனசு வந்தது அண்ணாவுக்கு? அம்மாவை மீறவும் அப்பாவை எதிர்க்கவும் எங்கேயிருந்து துணிவு வந்தது? எவ்வளவு கஷ்டப்பட்டு வளர்த்திருக்கிறார்கள்? அண்ணாவுக்குப் பரீட்சையென்றால் அப்பாவும் கூடவே கண் முழிப்பார். அம்மா நூற்றியெட்டு முறை ஆஞ்சநேயர் சுலோகத்தைச் சொல்லி, துளசி கொடுத்து அனுப்புவாள்... பணம் கட்ட, புத்தகம் வாங்க என்று அவனுக்காகப் பணம் ஒதுக்கி, தங்கள் சௌகரியங்களைக் குறைத்துக் கொண்ட சம்பவங்கள் ஏராளம். அவர்கள் விருப்பப்படி கல்யாணம் நடக்க அவன் அனுமதித்திருந்தால் குறைந்தபட்ச நன்றிக்கடன் செலுத்தியவனாகியிருப்பான்... இப்படிக் கையில்லாத ரவிக்கையோடு ஒரு மன்னி...

"ஏண்டி தட்டை சும்மா அளையறே? அடுத்த வேளைச் சாப்பாட்டிற்கே நேரம் வந்துடும். நீ எழுந்துக்கறதுக்குள்ளே..." அம்மா சலித்துக் கொண்டாள்.

"நானும் பார்க்கறேன், நாலு நாளா ஏதோ கப்பல் மூழ்கின மாதிரி மூஞ்சியைத் தூக்கி வைச்சிண்டிருக்காம்மா..." குமார் ஒத்துப் பாடினான்.

"என்ன வசந்தி? ஏதாவது காதல் சமாசாரமா...? யாரையாவது லவ் கிவ் பண்றியா...? சொல்லு, அப்பா, அம்மாகிட்டே சிபாரிசு பண்றேன்."

விளையாட்டாய்த்தான் சொன்னான் குமார். அதற்குப் போய் அவள் இப்படி அழுவாள் என்று எதிர்பார்க்கவில்லை. தட்டை வைத்துவிட்டு எழுந்து ஓடினாள். திரண்டு வந்த துக்கத்தில், சாப்பிட்டது அத்தனையும் வெளியேறிவிட்டது.

ஒரே நிமிடத்தில் வீடு வியட்நாம் வீடானது.

"ஏண்டா அவளைச் சீண்டி அழ விடறே...?" ஆற்றாமையுடன் கையோங்கினாள் சரஸ்வதி.

"சச்சு; என்ன ரகளை; ஏன் அவனை அடிக்கிறே...?" என்றபடி வந்த ராமநாதன், கிழிந்த நாராய் வசந்தி நின்ற கோலத்தைப் பார்த்து அதிர்ந்தார்.

"குழந்தைகிட்டே போய்ச் சீண்டறான். லவ் பண்றியா, அது இதுன்னு... அசிங்கமா..."

ஒரு வாரமாக உள்ளே போட்டு வைத்திருந்த பயங்கர ரகசியம் வெடித்துக் கொண்டு வெளியே வரத்துடிப்பதை உணர்ந்தாள் வசந்தி.

'பிராமிஸ் பண்ணு... வேற யாருகிட்டேயும் இதைப் பத்தி இப்போதைக்குப் பேச வேண்டாம்...'

அண்ணாவின் கையடித்துச் சத்தியம் பண்ணியபோது, அவன் கண்கள் பனித்துப் போனது நினைவுக்கு வர, வசந்தி தன்னைக் கட்டுப்படுத்திக் கொண்டாள்.

"ஆனாலும் இவ்வளவு அழுமூஞ்சியா நீ இருக்க வேண்டாம் வசந்தி..."

'அண்ணாவுக்கு வாக்கு கொடுத்ததுக்காக அப்பா, அம்மாவிடம் உண்மையை மறைக்கலாமா...?'

"சும்மா விளையாட்டுக்குத்தானே பேசினான் குமார்..."

'உண்மையை மறைக்கறதே பொய் சொல்றதுக்குச் சமம்தானே...'

"அவனும் ஸ்ரீராம் மாதிரி உன் அண்ணா தானே? என்ன, கொஞ்சம் சீண்டற சுபாவம். அதை நீதான் புரிஞ்சுண்டு தள்ளிண்டு போகணும்!"

'அப்பா - அம்மாகிட்டேயே உண்மையை மறைக்கலாமா... அதுவும் இவ்வளவு சீரியஸான ஒரு விஷயத்தை...'

பெற்றோர் மாறி மாறி சமாதானம் செய்தது மனத்தில் பதியாமல், வசந்தி தனியொரு சிந்தனை உலகில் சுற்றி வந்தாள்.

"நாளைக்குக் கல்யாணமாகி குடித்தனம் பண்றச்சே இப்படியெல்லாம் மூக்கைச் சிந்திண்டு அழுதுண்டு இருந்தா கட்டுப்படியாகுமா...?"

திரும்பவும் எழுந்த கல்யாணப் பேச்சில் அறுபட்ட தந்தியாக உண்மை அவளிடமிருந்து வெளிப்பட்டுச் சிதறியது.

"அப்பா, அண்ணா ஒரு பொண்ணை லவ் பண்றாம்பா. அவளைத்தான் கல்யாணம் பண்ணிப்பேங்கறான்..."

உதடு துடிக்க அப்பாவைப் பார்த்தாள்.

"யாரு... ஸ்ரீராமனா...?"

"ஊம்..."

ஒருகணம், ஒரே ஒரு கணம்தான் - அவர் விழிகள் தோல்வியால் துவண்டதை உணர்த்தின. மறுகணமே கோபத்தில் இறுகிக் கொண்டன.

(தொடரும்)



# "இது மூப்பனாரை பாதிக்கிற பட்ஜெட்!"

சென்னையில் நடந்த பட்ஜெட் விளக்கக் கூட்டத்தில் மூன்று புதுமைகள்.

1. பட்ஜெட் போட்ட நிதி அமைச்சரே அதை விளக்கிப் (ஒருவித தன்னிலை விளக்கம் தான் என்றாலும்!) பேசியது.

2. டெக்னிகலாகவெல்லாம் பேசி, குழம்பியவர்களை மேலும் குழப்பாமல், பாமர ரஞ்சகமாக - ஆங்காங்கே நகைச்சுவை சொட்டப் பேசியது.

3. பொது மக்களைக் கேள்வி கேட்க விட்டு (எழுதித் தரச் சொல்லி) அதற்கும் பொறுமையாக பதில் சொன்னது.

தமிழ் மாநில காங்கிரஸ் ஏற்பாடு செய்திருந்த இந்தக் கூட்டத்தில் காமராஜ் அரங்கம் நிரம்பி வழிந்தது. ஒரு நாட்டின் நிதியமைச்சர் பேச்சிலும் பழகுதலிலும் இத்தனை எளிமையாக இருக்கிறாரே என்று வந்திருந்த சுமார் இரண்டாயிரம் பேரும் (முன்னூறு முன்னூற்றைம்பது புடைவைகள், இருபது கூடிதார்கள் உட்பட) வாயடைத்துப் போய் விட்டார்கள்!

ஒரு மேல்நிலைப் பள்ளிப் பொருளாதார வாத்தியார் மாதிரிதான் ஆரம்பித்தார் சிதம்பரம். கேஷுவலாகத் தொடங்கியது பெரிசில்லை. அதே நகைச்சுவையுணர்வை கடைசி வரை கடைப்பிடித்ததுதான் அதிசயம்!

ஓர் உதாரணம் : மாநில நிதி அமைச்சருக்கும் மத்திய நிதி அமைச்சருக்கும் என்ன வித்தியாசம்? இரண்டு பேரும் பட்ஜெட் போடுகிறார்கள். இரண்டு பேரும் அறிக்கை சமர்ப்பித்து, வாங்கிக் கட்டிக் கொள்கிறார்கள். இரண்டு பேரும் பற்றாக்குறை பற்றிப் பக்கம் பக்கமாகப் புலம்புகிறார்கள்.

என்ன பெரிய வித்தியாசம்?

"மாநில நிதி அமைச்சரால் அதிகபட்சம், புலம்பத்தான் முடியும். மத்திய நிதி அமைச்சரோ, புலம்பி விட்டு, நாசிக்குக்கு ஒரு போன் அடித்து, கூடுதலாக நோட்டு அடிக்கச் சொல்லி விடலாம்!"

– சிதம்பரம் இதைச் சொன்னபோது நிறைய பேர் சிரித்தார்கள், பின்னால் இருக்கிற சிரமங்கள் புரியாமல். அடிக்கிற நோட்டுக்குச் சமமாகத் தங்கம் வைத்தாக வேண்டும். முழி பிதுங்குகிற கேள்விகளுக்கு ரிசர்வ் வங்கி பதில் சொல்லியாக வேண்டும்.

பெட்ரோல் - டீசல் - சமையல் வாயு விலையேற்றம் பற்றி மக்கள் சரமாரியாகக் கேள்விக்கணைகள் தொடுத்தார்கள். சிதம்பரத்தின் பதில் :

"பட்ஜெட்டுக்கும் அதற்கும் சம்பந்தமில்லை. பட்ஜெட்டுக்கு முன்பே விலை ஏறி விட்டதே? பெட்ரோலியப் பொருள்களின் கொள்முதல் விலைக்கும் விற்பனை விலைக்கும் உள்ள இடைவெளி குறைந்து விட்டதால் தான் விலையேற்றம்."

இப்படியொரு வாழைப்பழ பதிலைக் கேட்டு மக்கள் எப்படி அன்று அமைதியாக இருந்தார்கள் என்பதுதான் புதிர்.

விலைவாசி பற்றி என்ன சொன்னார்?

மூச்! மிகத் திறமை வாய்ந்த மேடைப் பேச்சாளர்களைக் காட்டிலும் சாமர்த்தியமாக அந்த சப்ஜெக்டுக்கே போகாமல், கேட்பவர்களுக்கும் அந்த ஞாபகமே வரவிடாமல் எங்கெங்கோ ஊர்கோலம் கூட்டிப் போய் விட்டார்!

அன்றைய கூட்டத்தின் ஹைலைட், 'சிகரெட் மீது மட்டும் ஏன் வரி போட்டேன்?' என்பதற்கு சிதம்பரம் சொன்ன காரணம்தான்.

"சுதந்தர இந்தியாவின் ஐம்பதாவது பட்ஜெட்டைப் போடுகிற பெருமை, எங்கள் தமிழ் மாநில காங்கிரஸ் கட்சியின் சார்பில் அமைச்சராகியிருக்கும் எனக்குக் கிடைத்திருக்கிறது. இந்த பட்ஜெட், எந்த வகையிலாவது எங்கள் தலைவர் மூப்பனாரை பாதிக்க வேண்டாமா? அதனால்தான் சிகரெட் மீது மட்டும் வரி அதிகப்படுத்தினேன்!"

— ஔரங்கசீப்

வண்ணப்படம் : சாய்வர்ஷா

# நாற்பத்து மூன்றாவது

## சத்தியப்பிரியன்

சில்வியா மீண்டும் அந்த வலியை உணர ஆரம்பித்தாள். அதன் தன்மை, வீச்சு, நிலை கொண்ட இடம் எதுவுமே சரியாகப் புரிபடாமல் போனாலும் அந்த வலி தோன்றிய மறுகணம் ஏற்படும் மூச்சுத் திணறல் இம்முறையும் எழுந்தது. கண்ணுக்குப் புலப்படாத ஒரு முரட்டுக் கரம் அவளது நுரையீரல் பைகளை இறுக்கிப் பிழிவது போல் இருந்தது.

மேனி முழுவதும் வேர்த்திட, கட்டிலுக்கு அருகாமையில் இருந்த விடிவெள்ளி விளக்கின் ஸ்விட்சை போட்டாள். வெளிச்சம் என்றுமே வலிகளை வலுவிழக்க வைக்கும். மணி இரண்டைத் தாண்டியிருந்தது.

மெத்தையின் மீது சில்வியா நன்றாக சம்மணமிட்டு அமர்ந்தாள். ஐம்பது வயது நெருங்குவதை சுருக் என வலிக்கும் முட்டிகள் நினைவுபடுத்தின. மூச்சை சீராக உள்வாங்கி, சிறிது நேரம் சஞ்சரிக்கவிட்டு, நிதானமாக மூச்சை வெளியேற்றினாள். ஆரம்பத்தில் கடினமாக இருந்தது. ஸ்வாசம் கட்டுப்பட மறுத்தது. நெஞ்சு பிராணவாயுவுக்காக அடித்துக் கொண்டது. உள்ளே ஒரு குரல், இவளுக்கு வலி வரும் பொழுதெல்லாம் தோன்றுமே அதே குரல், அவளை பொறுத்துக் கொள்ளச் சொன்னது. இருபத்தியேழு வருடங்களாக ஒலித்துக் கொண்டிருக்கும் குரல். வலிக்குக் கட்டுப்படுகிறாளா, குரலுக்குக் கட்டுப்படுகிறாளா எனத் தெரியாது. இந்த இருபத்தியேழு வருடங்களிலும் இரண்டுமே ஒன்றாக அவளுடன் தங்கிவிட்டன.

வலியைப் பற்றிய ஆரம்ப பயம் தெளிவடைய, மீண்டும் அவளுக்கு தைரியமூட்டிய அதே குரல் கேட்டது. சில்வியா! உன் தனிமையில் யாரை ஏமாற்றுகிறாய்?

சுவரின் மீது தேவமைந்தன் நல்லிடையனாய் ஈச்சை மர நிழலில் அமர்ந்திருக்க, கண் பார்வையில் செம்மறி ஆடுகள் மேய்ந்தபடி இருக்கும், படத்தின் கீழே காணப்பட்ட வாசகம், 'நானே சத்தியமும், ஜீவனும், வழியுமாக இருக்கிறேன்.'

'நானே வலியும், வேதனையுமாக இருக்கிறேன்' என தேவமைந்தன் கூறியிருக்கலாம். ஜீவன் என்பது என்ன? ஏன் இந்த இருபத்தியேழு வருடமும் இது பதுங்கிப் பதுங்கி ஒரு கள்வனைப் போல, ஒரு திருட்டுப் பூனையைப் போல அரவம் அடங்கிய பின் வெளிப்பட வேண்டும்? இது அடங்கவே அடங்காதா?

கர்த்தரின் படத்தின் மேல் லேசாகப் படிந்திருந்த புழுதிப் படலத்தைத் துடைத்தாள். வினோலியாவின் கல்யாண அமளியில் போன நாற்பது நாட்களாக விருந்து, சீராட்டு எனக் கழிந்ததில் வீட்டைத் துப்புரவு செய்து கொண்டிருக்கும் தனது அன்றாட அலுவல் கூட மாறிப் போயிருக்கிறது.

வெளியே பனி பெய்து கொண்டிருந்தது. வானம் கரு நீலமாக விரிந்திருந்தது. விடிவதற்கு அதிக நேரமில்லை. இனிமேல் தூக்கம் வருவது கடினந்தான். வலியின் இன்னொரு விளைவு தூக்கமின்மை.

முதன் முதலில் இப்படி ஒரு தூக்கமின்மையை உணர நேர்ந்தது, இன்னும் நினைவில் துல்லியமாக உள்ளது. ஞாபகத் திசுக்களின் அடர்த்தியும் கூட, இந்த வலிக்கு ஒரு காரணமாக இருக்கலாம். அந்த நாட்களில் அவளுக்கு வேலை கிடைத்து விட்டிருந்தது. மெர்லின் சிற்றப்பாவின் நெருங்கிய சினேகிதர் அரசுடமை வங்கி ஒன்றில் ஏஜென்டாக இருந்ததால், இப்பொழுது கையாளப்படும் எழுத்தர் தேர்வு எதுவுமில்லாமல், இவளது பி.எஸ்ஸி பட்டப்படிப்புக்கு சுலபமாக வேலை கிடைத்தது. அவள் இருந்த ஊருக்கு மாற்றல் கிடைக்காமல் சிற்றப்பாவின் வீட்டில் தங்கியிருந்த நாட்கள் அவை. சிற்றப்பாவுக்கு சில்வியாவிடம் தனி பிரியம் உண்டு. அவர் இப்பொழுது இல்லை என்றாலும் அந்தப் பிரியத்தின் தொடர்ச்சியைப் போல அவரது இரண்டு பிள்ளைகளான ராஜாவும், சுதாகரும்தான் வினோலியாவின் கல்யாணத்தை அடி வரை நடத்தினார்கள்.

அந்த நா்ட்களில்தான் அவளது முதல் கடிதத்தை சித்தி படித்துப் பார்த்தாள். அவனா? அவரா? இருபத்தியேழு வருடங்கள் அவனும் கூட இருந்திருந்தால் அவர் என நினைக்கவும், விளிக்கவும் பட்டிருக்கலாம்.

"புதுப் பொண்ணே! வீட்டுக்காரர் லெட்டரில் என்ன எழுதியிருக்கார்?"

"ரெண்டு வாரமா மூச்சுத் திணறல் ஜாஸ்தியாயிடுச்சாம். ரெண்டு, மூணு டயாலிசிஸ் பண்ணிக்கிட்டா சரியாயிடும்னு எழுதியிருக்கார்."

இளமைக்கு உள்ள முக்கிய குணங்களில் ஒன்று மரண சிந்தனையின்மை. சில்வியாவுக்கு சுத்தமாக மரண பயம் இல்லாமல் இருந்ததோடு, சிறுநீரகப் பழுதின் முழு வீச்சும் தெரியாமல் இருந்தது.

"லெட்டரைக் கொண்டா சில்வி." சித்தி அவள் கடிதத்தைப் பிடுங்கிப் படித்தாள். படித்து முடித்து விட்டு, "அடிப்பாவி! மோசம் பண்ணிட்டாங்கடி உனக்கு" என்று அலறி னாள்.

அந்த நாளில்தான் க்ரேஸ் சித்தி சிறுநீரகப் பழுது பற்றியும், ரத்த சுத்திகரிப்பு பற்றியும், மாற்று சிறுநீரக சிகிச்சை பற்றியும் சொன்னாள். நம்புவது கடினமாக இருந்தது. சடார் என்று காலடியில் பூமி நழுவியது போல பயமாக இருந்தது. அந்த இரவில்தான் வலியின் ஆரம்ப அறிகுறியைப் போல தூக்கமின்மை நேரிட் டது. அப்பாவும், அம்மாவும் ஊரெல்லாம் அலசிப் பார்த்து நிச்சயித்த மாப் பிள்ளையின் தீவிர சிறுநீரகப் பழுதை ஏன் விசாரிக்காமல் விட்டார்கள்? விதி என்பதா? சத்தியமும், ஜீவனும், வழியும் காட்டும் தேவமைந்தன் ஏன் என் பாதையை முற்றிலும் முட்களால் மறைத்து வைத் தான்?

# நாள்!



"சில்வியா."

குரல் கேட்டு திரும்பி னாள்.

அறை வாசலில் அம்மா நின்று கொண்டிருந்தாள். கோரங்களில் கலந்து கொள்வ திலும், நற்செய் திக் கூட்டங் களின் செயற் குழு உறுப்பினராகச் செயலாற்றுவதிலும் இந்த எழுபது வயதிலும் அவளால் எப்படி முடி கிறது? தான் சரிந்து, உதிர்ந்த நாளிலிருந்து தாங்கிப் பிடித்த தூண் என்பதாலா?

"தூங்கலியா சில்வியா?"

ஜன்னலிலிருந்து விலகி அம்மாவைப் பார்த்து, "இல்லை" என்றாள்.

"மூச்சு முட்டுதா?"

"லேசா."

"மாத்திரை சாப்பிட்டியா?"

"வலி ஏன் வருதுன்னு எனக்கும் நல்லாத் தெரியும், உனக்கும் நல்லாத் தெரியும். அப்புறம் எதுக்கு மாத்திரை, மருந்துன்னு?"

"நாளைக்கு... இல்லயில்ல.. இன்னிக்கு வினுவும், மாப்பிள்ளையும் தேனிலவு முடிச்சிட்டு வர்றாங்க தெரியுமில்ல?

(தொடர்ச்சி 50-ஆம் பக்கம்......)



**க**ண் பராமரிப்புங்கறது ரொம்ப ஈஸி. தினசரி மூணு நிமிஷம் அதுக்காகச் செலவு செய்தால் போதும். பதினஞ்சு, இருபது நாளில் நம் கண் ரொம்ப ஃப்ரெஷ்ஷா இருக்கறதை நாமே உணர்வதோடு, மத்தவங்களும் நம்ம கண்ணுல ஒளி தெரியறதைப் (!) பார்த்து, என்ன விஷயம்னு கேப்பாங்க. நாமும் இஷ்டத்துக்குப் பீலா விடலாம். ஒரு தமாஷுக்குச் சொல்றேன்.

அஞ்சு விஷயம் தினசரி உங்களால செய்ய முடியாதா? மொத்தமா அஞ்சு நிமிஷம் கூட ஆகாது இதுக்கு. ட்ரை பண்ணிப் பாருங்க!

1. சூரிய நமஸ்காரம் பத்தி, புராண காலத்திலிருந்தே சொல்லிட்டு வராங்க. அதுல அப்படி என்ன பெரிய லாபம் இருக்கு? தொடர்ந்து ஒரு ரெண்டு நிமிஷம் காலைல ஒரு சின்ன துவாரம் மூலமா (கை விரல்கள் மூலமாகவே ஏற்படுத்திக்கலாம்!) இளம் சூரியனைப் பாருங்க.... அந்த - அதிகம் கூசாத ஒளிக்கு நூறு வைட்டமின் மாத்திரைகளை விட அதிக பவர் இருக்கு. கண்ணுக்கு அது பவர் தர்றது ஒரு பக்கம் இருக்கட்டும்... கண்ணுக்கே தெரியாம, கண்ணுக்குள்ள ஒளிஞ்சிட்டிருக்கற கிருமிங்களெல்லாம் அதனால டாட்டா சொல்லிட்டுப் போயிடும்!

2. அந்தக் காலத்து அசோகன் படங்களெல்லாம் பார்த்திருக்கீங்க இல்லை? ஒரு அரை வட்ட ஷேப்புல கண்ணை உருட்டி உருட்டி விழிப்பாரே? அது ஒரு எக்ஸலென்ட் எக்ஸர்ஸைஸுங்க! சும்மா ஒரு பத்துப் பத்து தடவை டயம் கிடைக்கற போதெல்லாம் கண்களை க்ளாக் வைஸிலும் ஆன்ட்டி-க்ளாக் வைஸிலும் சுழற்றிச் சுழற்றிப் பாருங்க. ஆரம்பத்துல கொஞ்சம் வலிக்கும்தான். போகப் போக, க்ரீஸ் போட்ட சைக்கிள் செயின் மாதிரி ரொம்ப ஸ்மூத்தா அதுவே சுழல

ஆரம்பிச்சுடும். இதனால என்ன லாபம்னா தொடர்ந்து கண்ணுக்கு ஸ்ட்ரெயின் குடுத்துட்டே இருந்தாலும் வலிக்காது; கண்ணுல தண்ணி வராது.

3. சில மேற்கத்திய நாடுகளிலெல்லாம் கண்டிப்பா மத்தியான வேளையில ஒன்-அவர், ரெண்டு அவர் எப்படிப்பட்ட வேலையில இருந்தாலும், ஆஃபீஸ் டயத்துல கூடக் கண்டிப்பா தூங்கிடுவாங்களாம்! தொடர்ந்து வேலை பார்க்கிறவங்களுக்கு அந்த ரெஸ்ட் ரொம்ப உபயோகம்ங்கறது ஒரு பக்கம் இருக்கட்டும்... நம்ம ஊர்ல அதெல்லாம் சாத்தியமில்லையே! என்ன பண்ணலாம்? சிம்பிள். அஞ்சு நிமிஷம் - இல்லாட்டா பத்து நிமிஷம் கண்ணை மூடிட்டு, லன்ச்-அவர்ல பேசாம இருக்கறது! அப்ப கண்ணுக்குள்ள ஒரு மாதிரி ஆரஞ்சு இல்லாட்டா பிரௌன் கலர்ல தூசு பறக்கறாப்பல இருக்கும். அதை உத்துப் பார்த்துட்டே இருங்க. மறுபடியும் வேலை தொடங்கறப்போ ரொம்ப ஃப்ரெஷ்ஷா இருக்கும்!

4. எப்படி ரொம்ப நேரம் கண் விழிக்கறது தப்போ, அதே மாதிரி ரொம்ப நேரம் தூங்கறதும் தப்புத்தான். ஒரு நாளைக்கு ஆறுலேருந்து ஏழு மணி நேரத்துக்கு மேல தூங்கறது நல்லதில்லை. (இது குழந்தைகளுக்குப் பொருந்தாது)

5. வாழ்க்கைல அப்பப்போ கண்ணீர் விட்டு அழுணும். 'என்னடா இது பேத்தலா இருக்கே'ன்னு தோணுதா? எனக்குத் தெரிஞ்ச எங்க ப்ரொபசர் சொல்லிக் குடுத்ததைச் சொல்றேன். ஏன்னா, கண்ணுலேருந்து வடியற தண்ணி இருக்கு பாருங்க... அது பாவத்தை நீக்கற கங்கை நீர் மாதிரி! வருஷக்கணக்கா மன்னார்குடிக்காரங்க சேத்து வெச்ச சொத்து மாதிரி, கண்ணுல சேர்ந்திருக்கிற அழுக்கு, கிருமிகளெல்லாம் வெளியில வரவழைச்சுடும். கண் ரொம்ப ஃப்ரெஷ்ஷாயிடும்! பொதுவா இப்படிச் சொன்னா யாரும் நம்ப மாட்டாங்க. ஆனா இதான் ஃபேக்ட்!

## ஹலோ சுகமா?

இதெல்லாம் தவிர, ஆரோக்கியமான கண்களுக்கு இன்னும் முக்கியமா நாம செய்ய வேண்டிய காரியம் பொடுகு இல்லாத தலைமுடி வைச்சுக்கறது! குழப்பறேனா? ரிலாக்ஸ்....!

நம்ம தலையிலே பொடுகு இருந்ததுன்னா அது காத்துல பறந்து வந்து கண் இரப்பைகளிலே குடித்தனம் புகுந்துடும். அது மெள்ள, மெள்ள கண்ணுக்குள்ள போக ஆரம்பிச்சுதுன்னா, கண்ணு செவந்துடும்.

சில ஆண்கள் ரொம்ப உத்தமர்களாவே இருப்பாங்க. ஆனா கண்ணு மட்டும் எப்பவும் சிவந்திருக்கறதைப் பார்த்துட்டு, "என்ன மாமு, தண்ணி போட்டியா?" அப்படின்னு பிரெண்ட்ஸ் கேலி செய்ய ஆரம்பிச்சுடுவாங்க.

விஷயம் இதுதான். தலைப் பொடுகு கண்ணுல சேரச் சேர, கண் சிவக்கறது ஒரு பக்கம் இருக்கட்டும், அடிக்கடி கண்ணுல தண்ணி, பார்க்கிற பொருளெல்லாம் கலங்கலாத் தெரியறது, கண் எரிச்சல், ஏன் தலைவலி கூட வரும்!

ஸோ, பொடுகு இல்லாமப் பார்த்துக்குங்க!

இந்த வாரம் இது போதும். நெக்ஸ்ட் வீக், மூக்கு முட்டப் பேசலாம். ஓகே! பை!

— சுமி

# கல்கிக்கு நிகர் கல்கிதான்!

♦ 'நேற்று சசி, இன்று குமாரி நாளை யார்?' என்ற கேள்விக்குறியோடு கூடிய கட்டுரையைப் படித்தேன். இதில் இந்திரகுமாரியின் கைது பற்றிய செய்தியும், கைதான காரணமும் தெள்ளத் தெளிவாக விளக்கப்பட்டிருப்பது சிறப்பு அம்சம். மேலும் நாளை யார்? என்று கேள்விக் குறியிட்டு விட்டு, அதற்கு அ.தி.மு.க. அமைச்சரவையில் பாதிக்கு மேற்பட்டோர் இருக்கக்கூடும் என்ற ஒரு கருத்துக் கணிப்பையும் கூறியது அருமை!

பாளையங்கோட்டை, கு. சரவணன்.

♦ த.மா. காங்கிரஸ் மாநாடு நடந்து முடிந்திருக்கும் இந்த நேரத்தில் எல்லா பத்திரிகைகளும் பாராட்டி மட்டுமே எழுதியிருக்க, நீங்கள் மட்டுமே பாராட்டியதோடு, கொள்கைகளைத் தெளிவாக்காமல் வாய்ப்புகளை நழுவ விட்டதையும் சுட்டிக்காட்டியிருக்கிறீர்கள். கல்கிக்கு நிகர் கல்கிதான்.

சென்னை – 59, ரொசாரியோ ரவிச்சந்திரன்.

♦ ஏகப்பட்ட குற்றச்சாட்டுகளுக்கு ஆளாகி விட்ட நரசிம்மராவையே உடும்புப்பிடியாகப் பிடித்துக் கொண்டு தலைமைக்குக் கட்டுப்படுகிறேன் என்கிற ஒரே வாதத்தைக் குமரியார் சொல்வது சரியாகத் தோன்றவில்லை. காங்கிரஸ் என்ற பேரியக்கம் சிதறுண்டு போவதில் குமரியாரைப் போல, மூப்பனாருக்கும் உடன்பாடில்லை. தம் கட்சிக்கு காங்கிரஸ் பெயரைத்தான் வைத்திருக்கிறார். காங்கிரஸ் கொடியைத்தான் பயன்படுத்துகிறார். சமீபத்திய மாநாட்டில் நரசிம்மராவை எதிர்த்து ஒரு குரலாவது ஒலித்ததா? எனவே மூப்பனாரின் நோக்கம் காங்கிரசைப் பிளப்பது அல்ல; வளர்ப்பது! ஒரு சாதாரணத் தொண்டன் கூட புரிந்து கொள்ளும் இந்நிலையை குமரியார் ஏன் புரிந்து கொள்ளவில்லை?

விராலிமலை, ச. நாகராஜன்.

♦ 'நிருத்திய சூடாமணி' அனிதாவின் அடக்கமான பண்பு அதிசயிக்க வைத்தது. லஞ்ச ஊழல், குழந்தைத் தொழிலாளர் பிரச்னைகள் போன்றவற்றைக் கூட நாட்டியத்தில் கொண்டு வர முடியும் என்பது பிரமிக்க வைக்கிறது.

திருக்காம்புலியூர், க. குழந்தைவேல்.

♦ "ஆபீஸ், மாமியார், அரசியல் ஜோக்ஸ் கிடையாது" என்று முதல் பக்கத்திலேயே முத்தாய்ப்பாய் அறிவிப்புச் செய்து, 'இந்த மாதிரியான அரைச்ச மாவு அயிட்டங்களையெல்லாம் இனி புதுமைக் கல்கிக்கு அனுப்பிக் கழுத்தறுக்காதீர்கள்' என்பதைத் நுணுக்கு எழுத்தாளர்களுக்கு மறைமுகமாக உணர்த்தி விட்டீர்களே, பலே!

எஸ். மாரியூர், ஆர். முருகானந்தம்.

♦ சத்தியப்பிரியனின் 'நவீன சுயம்வரம்' சிறுகதையில் நகைச்சுவை இழைந்தது. தற்காலப் போக்கின் கண்ணாடியாகவும் அமைந்துள்ளது.

தருமபுரி-3, எஸ். குருமூர்த்தி.

♦ அனைத்து பத்திரிகைகளும் ஒலிம்பிக் விளையாட்டைப் பற்றி மட்டுமே எழுதிக் கொண்டிருக்கும் போது, தாங்கள் மட்டும் வித்தியாசமாக ஒலிம்பிக் நடக்கும் அட்லாண்டா நகரைப் பற்றி எழுதியது உண்மையில் தெரிந்து கொள்ள வேண்டிய செய்தி. பாராட்டுக்கள்!

சென்னை – 52, காட்டாவூர் இலக்கியன்.

## ரூ. 20 பரிசு பெறும் கடிதம்

♦ 'ஐந்தில் வளையாதது ஐம்பதில் மட்டும் வளைவது சாத்தியமா...? கொடுத்து வாழ்வதை மட்டுமே சுபாவமாய்க் கொண்டு வளர்ந்தவன் எத்தனை இடர்ப்பாடுகள் வந்தாலும் கொடுப்பதையே தன்னிலையாய் நிலைநிறுத்துகிறான். கெடுத்து வாழ்பவனும் தான் சார்ந்ததில் இருந்து தவறுவதேயில்லை. வளர்ப்பு முறையின் முரண்களே சமூக முரண்களாய் வளர்ந்து, மானுட வாழ்வில் மனிதநேயத்தை நழுவவிட்டு, மனித வக்கிரங்களைத் தழுவக் காரணிகளாகின்றன. இரண்டு பக்கங்கள்தான் எனினும் சொல்லவே முடியாத சிந்தனைத் துளிகளைப் படிப்போர் மனத்தில் அரும்ப விட்டுச் சென்றது கே. ரவிசங்கர் எழுதின 'வீட்டுத் துட்டு' சிறுகதை. அற்புதம்.

ஒண்டிப்புதூர், கா.க.வே. ரோகிணி.

♦ சினிமாவின் நூறு வருட சாதனை பற்றிய அலசல் அருமை. எம்.எஸ்.வி.யின் வார்த்தைகள் யதார்த்தமானவை. தேசபக்தியைக் கூட தொப்புள் காட்டிச் சொன்னால்தான் ஓடும் என்ற நிலைக்கு வந்து விட்ட சினிமா, செய்திருப்பது சாதனையா, வேதனையா என்று பட்டிமன்றமே நடத்தலாம்.

திருநெல்வேலி – 11, எஸ். ஆர். ஸ்வாமி.



13

பகவானுக்கும் நமக்கும் ஒன்பது வித சம்பந்தம் என்று சாஸ்திரத்திலே சொல்வார்கள். அதில் ஒன்று பதி-பத்னி பாவம். அவன் பதி; நாமெல்லாம் பத்னி. கோபிகாஸ்த்ரீகள் வெளிப்படுத்தியது இந்த பாவம். பரமாத்மா வேணுகானம் பண்ணியபோது, குழந்தைக்கு தலைபின்னிக் கொண்டிருந்தவர்களும், பர்தாவுக்கு சிசுருஷை செய்து கொண்டிருந்தவர்களும், மாடு கன்றை கவனித்துக் கொண்டிருந்தவர்களும் தங்கள் காரியங்களை விட்டுவிட்டு அவனிடத்திலே போய்விட்டார்கள்.

பகவான் அவர்களிடத்திலே கேட்டான் : "இப்படி பர்தாவை விட்டுட்டு ஓடி வந்து விட்டீர்களே, இது தோஷமில்லையா....?"

கோபிகாஸ்த்ரீகள் வெட்கத்தில் தலை குனிந்து காலால் பூமியைக் கீறினார்கள். "விச்வாத்மா இல்லையா நீ? எல்லோருக்கும் பதி அல்லவா நீ? அது எப்படி தோஷமாகும்?" என்றார்கள்.

இங்கேயிருந்து ஒரு கணவன்-மனைவி திருவல்லிக்கேணி போனார்கள். இரண்டு பேரும் பகவானைப் பார்த்து, கைகூப்பி சேவிக்கிறார்கள். பத்னி உரத்த குரலில் அந்த பார்த்தசாரதி பெருமானைப் பார்த்து 'என் பதியே, விச்வஸ்ய பதியே! உன்னை விட்டால் கதி ஏது....!' என்று கதறுகிறாள். அவள் பக்கத்திலே நிற்கும் கணவனுக்குக் கோபம் வருகிறதா என்றால், இல்லை!....

முக்கூர் லக்ஷ்

# குறையொன்றுமில்லை

ஸ்த்ரீ - புருஷ பேதமெல்லாம் சரீரத்துக்குத் தானேயொழிய ஆத்மாவுக்கு உண்டோ! எனவே எல்லோரும் அவனைப் பதியாக மதிக்கும்படியான இந்த பாவம்...

ஸ்த்ரீகள் அவனைப் பதியாக பாவிப்பது போலவே, நிகரான பக்தியுடன் ஆண்களும் அவன் கையைப் பிடித்துக் கொள்ளலாம். ஆத்மா அவன், ஜோதி அவன் - விச்வ சப்தத்தி னாலே அறியப்படுகின்ற நாராயணன் அவன்.

விச்வரூபனானவன் எம்பெருமான் என்று பார்த்தோம். விச்வ சப்தத்தினாலே பத்து அவதாரங்களும் பேசப்படுகின்றன. இந்த அவ தாரங்கள் எல்லாமே பின்னால் சஹஸ்ரநாமத் திலே வருகின்றன.

'வேதத்தை மீட்க பரமாத்மா மத்ஸ்யாவ தாரம் பண்ணினான். அப்போது விச்வத்தி னாலே வேதங்கள் மீட்கப்பட்டன.' என்ற பொருள்பட ச்லோகம் இருக்கிறது. இதிலே 'விச்வம்' என்ற சொல் மத்ஸ்ய ரூபியைக் குறிக் கிறது. நம்மைக் காட்டிலும் பகவான்தான் அதிகமாக வேத சம்ரக்ஷணம் பண்ணுகிறான். நாம் பண்ணுவது ரொம்பக் குறைவு. பகவான் இப்படி ஏன் வேதத்தை ரக்ஷணம் பண்ணு கிறான்? ஏனென்றால் வேதம் அழிந்துவிட்டால் அவனை' நாம் உணர முடியாது.

'வேதம் இருக்கிறது என்றால் பரமாத்மா இருக்கிறான்... வேதம் இல்லை என்றால் பர மாத்மா இல்லை!' என்பது சாஸ்திரம் சொல் லும் உண்மை. சாஸ்திர அறிஞர்கள் சொல் கிறார்கள்.

இதிலே முதல் பகுதியை எல்லோரும் ஒப்புக் கொள்வோம். வேதம் இருக்கிறது என் றால் பரமாத்மா இருக்கிறான். ஆனால் 'வேதம் இல்லை என்றால் பரமாத்மா இல்லை' என்று எப்படிச் சொல்லலாயிற்று? இந்த உலகத்திலே வேத பாராயணமே யாரும் பண்ணுவதில்லை; அப்போ பரமாத்மாவே இல்லைன்னு சொல்லி விட முடியுமா? இதன் பொருள் என்னவென் றால், "வேதம் இருந்தால்தான், அதன் மூலமாக பரமாத்மாவை நாம் உணர முடியும்."

வேதம்தான் பரம ப்ரமாணம். அதனால் தான், நம் மீது எல்லையில்லா கருணை கொண்ட பகவான், அவனை நாம் உணரும் பொருட்டு, அதைத் தன் ஹ்ருதயத்திலே தரித் துக் கொண்டிருந்தான். ஸ்ருஷ்டியிலே மீண்டும் அதை உபதேசம் பண்ணினான். பிரளயத்தி லேயும் கூட சகலத்தையும் தாங்குகிறவன் அவன்.

'ஒரு பொருள் புறப்பாடின்றி முழுவதும் அகப்படக் கரந்து ஓர் ஆலிலைச் சேர்ந்தவன் - ஒரு வடபத்ரசாயி...

ஒரு சின்ன ஆலந்தளிரிலே, எல்லாவற்றை யும் விழுங்கின விச்வம் என்று சொல்லக்கூடிய பரமாத்மா படுத்துக் கொண்டிருக்கிறான்!

இதைக் கேட்கிற நமக்கெல்லாம் என்ன சந்தேகம் வரும்? ஒரு சின்ன ஆலந்தளிர் அவ் வளவு பளுவான வஸ்துவைத் தாங்க முடியுமா?

அந்தத் தளிரா அவனைத் தாங்குகிறது? அதையும் சேர்த்துத் தாங்குகிறவன் அவன் தானே!

ஆகையினாலே, பரமாத்மா இளந்தளிரிலே படுத்திருப்பதைப் பார்த்தால், அவன்தான் சகலத்தையும் தாங்குபவன் என்பதை நேரே, நமக்குள்ளேயும் காட்டிக் கொடுக்கும்படியாக அந்தக் காட்சி இருக்கிறது.

அதுதான் அகடிதகடனா சாமர்த்தியம்!




...மிநரசிம்மாச்சார்யார்

அகடிதம் என்றால், 'பண்ண முடியாதது'. பண்ண முடியாததையும் பண்ணிக் காட்டக் கூடியவன் பரமாத்மா. அதற்கு சாட்சியாய் பிரளய காலத்திலே அந்த இளம் ஆலந் தளிரிலே படுத்திருக்கிறான்.

தர்க்க சாஸ்திரத்திலே, தொன்னைக்கு நெய் ஆதாரமா? நெய்க்கு தொன்னை ஆதாரமா? என்று ஒரு வாதம் எழுந்தது.

இந்த தொன்னைக்கே ஒரு சிறப்பு. அதைத் தைக்கிறதே ஒரு கலை. அந்த கலையைத் தெரிந்து வைத்துக் கொண்டவன் 'பாதி வாத்தியார்' என்று சொல்வார்கள். ஏனென்றால் ஹோமம் பண்ணுவதற்கான நெய்யை தொன்னைகள் தைத்து, அதிலேதான் வைத்துக் கொள்வது. அதைச் சரியாய் தைக்காமல் போனால் ஒரு பக்கமாய்ச் சாய்ந்து, நெய் கொட்டிவிடும்!

சரி, இப்படி யக்ஞத்துக்குத் தேவையான நெய்யைத் தாங்குகிறதே, அந்த தொன்னை... ஒரு பெரிய தொன்னை - அதில் நிறைய நெய்...




இவற்றிலே எது, எதைத் தாங்குகிறது' என்பது சர்ச்சை.

சர்ச்சையிலே ஒருத்தர் சொன்னார் : "'பிரத்யக்ஷம் பிரமாணம்' - நேரே நாம் கண்ணால் பார்க்கிறோமே.. அந்த நெய், தொன்னையிலே வைக்கப்படுவதினாலே, தாங்குவது தொன்னை; தாங்கப்படுவது நெய்..." என்றார்.

சிலர் இவருடைய கருத்தை மறுத்து விட்டார்கள். "தாங்குவது தொன்னை இல்லை; தாங்குவது நெய்; தாங்கப்படுவது தொன்னை... நெய்யினால் தொன்னை தாங்கப்படுகிறது..." என்றார்கள்.

இது பிரத்யக்ஷத்துக்கு (கண்ணால் பார்ப்பதற்கு) விரோதம். ஆனால் சாஸ்திர திருஷ்டியாக அவர்கள் சொல்கிறார்கள். அதையும் நாம் ஒப்புக் கொள்ள வேண்டும். எப்படி?

என்ன நடக்கிறது அவ்விடத்திலே...? ஹோமம் நடக்கிறது. ஹோமம் என்கிற காரியத்துக்குத் தொன்னை வேணுமா? நெய் வேணுமா? நெய்தான்!

நெய்யானது, தொன்னைக்கு உயர்த்தியை உண்டு பண்ணுகிறது. அவ்வாறு உண்டு பண்ணுவதாலே நெய்தான் தொன்னையைத் தாங்குகிறது. இதை யாராவது 'இல்லை' என்று சொல்ல முடியுமா?

தர்க்க சாஸ்திரத்தினாலே இப்படி 'இருக்கு' என்பதை 'இல்லை' எனப் பண்ணிவிடலாம், 'இல்லை' என்பதை 'இருக்கு' என்றும் ஆக்கி விடலாம்! தர்க்க சாஸ்திரத்திலே ஒருவனுக்குச் சாமர்த்தியம் இருந்துவிட்டால் அவனால் சாதிக்க முடியாததே கிடையாது!

அஹோபில மடத்தின் நாற்பத்திரண்டாவது குரு ஸ்ரீமத் அழகிய சிங்கர் ஒரு கதை சொல்லுவார் :

வியாகரணம், ஜோதிஷம், தர்க்கம் என்று எல்லாவற்றையும் கற்ற நிபுணர் ஒருவர். அவர் தன்னைப் போலவே எல்லா சாஸ்திரங்களையும் ஒரே நபருக்குச் சொல்லித் தருவது கஷ்டம் என்று முடிவுக்கு வந்தார். தர்க்க சாஸ்திரத்தை ஒருவனுக்கும், ஜோதிஷத்தை வேறு ஒருத்தனுக்கும், வியாகரணத்தை இன்னொருவனுக்கும் சொல்லிக் கொடுத்தார்.

வியாகரணம் படிப்பவன் வந்தால் பல்லைத் தேய்த்துக் கொண்டே அவனுக்குப் பாடம் சொல்லித் தருவாராம். அவன் அப்படியே, பாவம்! அதை எழுதிக் கொண்டு கற்றுக் கொள்வான்.

ஜோதிஷம் கற்றுக் கொள்பவன் வந்தால் துணிகளைத் துவைத்தபடி பாடம் நடத்துவாராம்!

தர்க்க சாஸ்திரம் படிக்க வருகிறவனை மட்டும் பக்கத்திலே உட்கார வைத்துக் கொண்டு, அவன் தொடையைப் பிடித்து இழுத்துச் சொல்லித் தருவாராம்!

இதை குரு பத்னி பார்த்துக் கொண்டிருந்தாள். 'இரண்டு பேருக்கும் உதாசீனமாகச் சொல்லித் தருகிறார்... தர்க்கத்தை மாத்திரம் இழைச்சு இழைச்சு சொல்லித் தருகிறாரே?' என்று மனசிலே தோன்ற, அவரிடமே கேட்டாள்.

"சுவாமி! எல்லா சாஸ்திரங்களும் நமக்குக் கண்ணே போன்றவைதானே! ஒரு சாஸ்திரம் இல்லையென்றால் நம்மால் ஜீவிக்க முடியுமா? அப்படியிருக்கும்போது உமக்கு ஏன் இந்த ஓரவஞ்சனை? பட்சபாதம்! இது பாவ்யமா...?"

"உனக்கு நான் சொன்னால் தெரியாது. நாளைக்குக் காட்டறேன்...." என்று பதில் சொன்னார் குரு.

"நாளைக்குக் காட்டறதா?"

"நான் காட்டப் போவதில்லை. நீயே உன் செயலாலே தெரிந்து கொள்வாய்..."

**ம**றுநாள் 'குருவின் காதிலே ஓர் ஓணான் புகுந்து விட்டது; அதனால் அவர் மாண்டு விட்டார்...' என்று ஒரு வாக்கியத்தைப் பத்னிக்குச் சொல்லிக் கொடுத்து, அதை மூன்று மாணவர்களிடத்திலும் சொல்லச் சொன்னார்.

வியாகர்ணம் படிக்கிறவன் வந்தான். அவனிடம் குரு பத்னி இதைச் சொன்னபோது, அவள் சொன்ன வாக்கியத்தின் இலக்கணத்திலே அவனுக்குச் சந்தேகம் வந்துவிட்டது... உடனே அதைச் சரி பார்க்க நூல்களைத் தேடிப் போனான்.

ஜோதிஷம் படிக்கிறவனிடமும் அதையே சொன்னார். அவனோ 'சனி தசையானால் நீங்கள் சொல்வது போல் நடக்கக் கூடும். குரு தசையிலே நடக்காதே...' என்று குருவினுடைய ஜாதகத்தைத் தேடிப் பார்க்கப் போய்விட்டான்.

இத்தனையும் கேட்டபடி, குரு சமையலறையிலே, மறைவிலே இருந்து சிரித்துக் கொண்டிருக்கிறார்.

மூன்றாவதாக, தர்க்கம் படிப்பவன் வந்தான். அதே விஷயத்தை குரு பத்னி அவனிடம் சொன்னதுதான், தாமதம் ''அசம்பவம்!'' என்றான் அவன். "நீங்கள் சொன்னது நடந்திருக்க முடியாது...!"

"ஏன் அப்படிச் சொல்கிறாய்?"

''குருவினுடைய காது துளை சிறியது. ஓணான் அவர் காதுக்குள்ளே எப்படி நுழையும்? நீங்கள் சொல்வது மாதிரி ஒரு வேளை ஓணான் நுழைந்து குரு மாண்டு போய் விட்டார் என்றே வைத்துக் கொள்வோம், இப்படி நீங்கள் சிரித்தபடி என்னிடம் பேசுவீர்களா? நித்தியம் கணவன் - மனைவி சண்டை நடக்கும் ஒரு கிரஹத்திலே கூட பர்த்தா மாண்டு போனால் பத்னி அழுவாள். நீங்களோ அழாமல் சிரித்தபடி இருக்கிறீர்கள்.... ஆசார்யரே என்னைப் பரீட்சை பண்ண வேண்டாம்; வெளியே வாருங்கள்!" என்றான் தர்க்க சாஸ்திர மாணவன்.

''சத்சிஷ்யனே!'' என்று ஓடி வந்து அவனைக் கட்டிக் கொண்டார் குரு. "இப்போ புரிகிறதா தர்க்க சாஸ்திர மகிமை..." என்று பத்னியைப் பார்த்துக் கேட்டார்.

**இ**டம் பொருள் ஏவல் அறிந்து பேசும்படியான புத்தி கூர்மை தர்க்க சாஸ்திரத்தைப் படிப்பவருக்கு அமைகிறது. இப்படிப்பட்ட தர்க்க சாஸ்திரம் சொல்வதுதான் தொன்னைக்கு நெய் ஆதாரம் என்கிற உண்மை.

ஆலிலைக்கு பகவான் ஆதாரமா? பகவானுக்கு அது ஆதாரமா? என்றால் பகவானே விச்வமாக இருக்கிறபோது அதில் ஒரு துனி தானே ஆலிலை... அதையும் சேர்த்து அல்லவா தாங்குகிறான் என்று ஆகிறது! இப்படி தர்க்க வாதத்திலே முடிவு கிடைக்கிறது. ஆனால் அந்த தர்க்கத்தையும் தாண்டி நிற்கக் கூடிய விச்வபதி அவன். ஆலிலை அவனைத் தாங்குவதாகத் தோன்றுகிறது. ஆனால் ஆலிலையோடு, விச்வத்தையும் அதிலுள்ள வேதங்களையும் சேர்த்து அல்லவா பகவான் தாங்கிக் கொண்டிருக்கிறான்?

எனவேதான் வேதங்களைக் காப்பாற்ற அவன் எடுத்த மத்ஸ்யாவதாரம் விச்வம் என்கிற சப்தத்தினால் அறியப்படுகிறது.

(தொடரும்)

## ஸ்ரீகள் செய்வார்களா?



**தமிழக அரசு ஸ்ரீரங்கம், ஸ்ரீவில்லிபுத்தூர், ஸ்ரீவைகுண்டம் ஆகியவற்றின் பெயர்களை திருவரங்கம், திருவில்லிபுத்தூர், திருவைகுண்டம் என்று மாற்றவிருக்கின்றது.**

**ஸ்ரீ என்று ஆரம்பிக்கும் சில பிரபலங்களின் பெயர்களைத் திருவென்று ஆரம்பித்தால் எப்படி இருக்கும்.**

**ஸ்ரீதர் - திருதர்; ஸ்ரீதேவி - திருதேவி; ஸ்ரீபால் - திருபால்; ஸ்ரீப்ரியா - திருப்ரியா; ஸ்ரீநிவாஸன் - திருநிவாஸன்; ஸ்ரீவித்யா - திருவித்யா; ஸ்ரீகாந்த் - திருகாந்த்; ஸ்ரீலேகா - திருலேகா; ஸ்ரீநிதி - திருநிதி.**

**உடனடியாக இவர்கள் தங்கள் தமிழ்ப் பற்றைக் காண்பிப்பார்களா?**

**— வி. சிந்தாரவி**

# வாழ்க்கை

அந்த மரணத்தில் சோகத்தைவிட அதிர்ச்சிதான் இருந்தது. மரணம் இல்லை... மரணங்கள்... அவளும், அவளது இரண்டு குழந்தைகளும். போலீஸ் என்கொயரி, போஸ்ட் மார்ட்டம் எல்லாம் முடிந்து வரிசையாகக் கிடத்தப்பட்டிருந்தார்கள். வெள்ளிக்கிழமை இரவு, மூவரும் தற்கொலை செய்து கொண்டார்கள். மூன்று தற்கொலை என்பதை விட இரண்டு கொலை, ஒரு தற்கொலை என்றுதான் சொல்ல வேண்டும். எட்டு வயது, ஐந்து வயது பிள்ளைகளுக்குத் தற்கொலை பற்றி என்ன தெரியும்? அம்மாதான் இருவருக்கும் விஷத்தைக் குடிக்கக் கொடுத்து, தானும் குடித்து இறந்து விட்டாள்.

எப்படித்தான் மனசு வந்ததோ. செக்கச் செவேலென்று கொழுத்த கன்னத்துடன், சற்றே நீலம் படர்ந்த முகத்துடன் அமைதியாகப் படுத்திருந்த அந்தக் குழந்தைகளைப் பார்த்து மனம் தாங்க முடியாமல் தவித்தது.

அப்படி என்னதான் கஷ்டம்?

பணக்கார வீட்டில் பிறந்து, பட்டு மெத்தையில் வளர்ந்து, வாழ்க்கைப்பட்டதும் வசதியான இடத்தில்தான். பிஸினஸில் கொடி கட்டிப் பறந்தான் அவள் கணவன்.

திருமணமான பத்து ஆண்டுகளில் அவளும் அவனும் வாழ்ந்த வாழ்க்கையின் முழுமையைக் கண்டு பொறாமைப்பட்டவர்கள் அதிகம். இராப் பகல் உழைத்து பணம் சம்பாதிக்கவும், அதை அனுபவிக்கவும் தெரிந்தது அவனுக்கு. ஒவ்வொரு சனிக்கிழமை இரவும், ஞாயிற்றுக் கிழமை பகலும் வெளியில் சுற்றுவதும், பலவிதமாக உடுத்திக் கொண்டு, அலுக்காமல் புதுப்புது நகைகளைப் போட்டுக் கொண்டு முகமெல்லாம் சிரிப்பாக... முக்கியமாக அவள் வெள்ளை முகத்தில் இருந்த பூரிப்பு, சிரிப்பு... இப்படி உலர்ந்து உறைந்து போனதின் காரணம்?

அன்பைக் கொட்டிய காதல் கணவன், தன்னந்தனியாக விட்டு விட்டுச் சென்று விட்டானே என்ற ஆதங்கமா? இரண்டு நாள் சுரத்தில் எமன் வாயில் விழுந்துவிட்டது தாங்க முடியாத துக்கம்தான். எதிர்பாராத இழப்புதான். ஆனால் நடந்து மூன்று மாதங்களாகியுமா இன்னும் இவள் மனதை தேற்றிக் கொள்ளவில்லை? பிள்ளையை இழந்த இவள் மாமியாரும் சரி, மச்சினர், நாத்தனாரும் சரி... இவள் கூட இருந்து எவ்வளவோ தைரியம் கூறியும் அதற்குப் பலனில்லாமல் போய்விட்டதே. அன்பான குடும்பம் அவர்களுடையது. எனக்குப் பல வருடங்களாகப் பழக்கம். நிச்சயம் இவளைக் கை விடமாட்டார்கள். பண உதவி இவளுக்குத் தேவைப்படாது. பத்துத் தலைமுறை குந்தித் தின்றாலும் குறையாத சொத்து கூட. அதில் வரும் வட்டியில் மூன்று என்ன, முப்பது பேர் கூடச் சாப்பிடலாம். வாழ்க்கைத் தரத்தில் கொஞ்சம் கூட மாறுதல் இல்லாமல் வாழலாம்.

ஆனால் அவன் இல்லாமல் வாழ அவளுக்குச் சம்மதமில்லையோ... அதெப்படி? நிஜமான அன்பு இருந்திருந்தால் அவன் விட்டுச் சென்ற அவன் வாரிசுகளை வளர்த்து மனிதர்களாக, அவன் நினைவுச் சின்னங்களாக உருவாக்கிப் பெருமை கொண்டிருக்க வேண்டுமில்லையா? கணவனின் அன்பு வேண்டும், அவன் பணம் தந்த வசதி வேண்டும். ஆனால் விட்டுச் சென்ற பொறுப்புகள் மட்டும் சுமையாகிவிடுமா?

இதோ... இருபத்தி ஆறாவது வயதில் கணவன் இறந்த பின் இரு மகன்களையும் ஒரு மகளையும் தானே வளர்த்து ஆளாக்கிய அந்தத் தாய்... அவள் மாமியார்... இத்தனைக்கும் அவள் படிக்காதவள். அவளுக்கு இருந்த மனோதிடம் இவளுக்கு இல்லாமல் போனதேன்?

இதோ இரு குழந்தைகளின் சவத்திற்கு நடுவில் அமர்ந்து கொண்டு தலைவிரி கோலத்தில்... நடுத் தெருவில் உட்கார்ந்து அரற்றும் இந்தப் பாட்டியின் சோகம்தான் சத்தியம். குழந்தைகளின் கன்னத்தைத் தடவிப் பார்த்து... அதில் சூடு இருக்கா... என்றா....? என்ன வயிற்றெரிச்சல். அவள் செய்த தியாகம், உழைப்பு எல்லாம் வீண் வியர்த்தம்.

பணக்காரக் கும்பல்... பலர் உறவினர்கள், சிலர் நண்பர்கள்... தெருவாசிகள்... வேடிக்கை பார்க்க வந்தவர்கள். இதில் சம்பந்தப்படாத ஒரு சிறு பெண்... ஓரமாக நின்று கொண்டிருந்தாள். முகத்தில் அலாதி வருத்தம். சின்னப் பெண். பன்னிரெண்டு வயது இருக்கும். யார் இது? ஆ! ஞாபகம் வந்தது. இவர்கள் வீட்டு வேலைக்காரக் குட்டி. இரண்டாவது குழந்தை பிறந்ததும், "இடுக்கிக் கொள்ள" ஏற்பாடு செய்யப்பட்ட பெண். இவர்கள் வீட்டுக்குச் செல்லும் போதெல்லாம் குழந்தையைத் தூக்கிக் கொண்டு சிறு சிறு வேலைகளைச் செய்யும் பட்டாம் பூச்சி. இன்று அமைதியாக ஓர் ஓரத்தில் நின்று கொண்டிருந்தாள். நடப்பதில் கலந்து கொள்ள உறவுமில்லை. அந்நிய துக்



கம் என்று வில கவும் முடியவில்லை.

மற்ற விதிகள் நடந்து கொண்டிருக்கையில் அவளிடம் மெதுவாகப் பேச்சுக் கொடுத்தேன்.

"உம் பேர் என்னம்மா?"

"விஜயா."

"அஞ்சு வருஷமாச்சா நீ இங்க வேலைக்கு வந்து?"

"ம். சின்னப் பையன் பிறந்து ஒரு வாரத்துக் கெல்லாம் வந்தேன். அது எங்கிட்டதான் எப்ப வும் இருக்கும்."

"என்ன சம்பளம் உனக்கு இங்க?"

"சாப்பாடு துணிமணியோட மாசம் இரு நூறு ரூபா..."

"சேத்து வச்சிருக்கியா?"

"இல்லீங்க. பணத்தை எங்கம்மா வாங்கிக் கிடும். எங்கப்பாரு செத்துப் போனப்ப இங்க கொண்டு விட்டாங்க. அம்மாவும் நாலு வீட் டுல வேலை செய்யுது. அதில ஒரு ஐந்நூறு வருது. அதிலதான் அம்மா, என் தம்பிங்க இரண்டு பேர் சாப்பாடு, வாடகை கட்டி, ஸ்கூல் பீஸ் அடைச்க... என்னையும் படிக்க வைக்க ஆசை. ஆனா முடியாது."

"இப்ப நீ என்ன பண்ணுவே?"

"வேற வேலைக்குப் பார்க்கணும். ஏறத்தாழ இருந்தாலும் சம்பளம் வேணுமே. நானும் அம்மாவும் சம்பாரிச்சாதான் குடும் பம் நடக்கும்."

"உங்கப்பா ஒண்ணும் விட்டுப் போகலியா?"

"பெரிசா ஒண்ணுமில்லீங்க. அவர் வாட்ச்மேனா வேலை பார்த்தாரு. நல்ல சம்பளம்தான். அவர் உயிரோட இருந்த வரைக்கும் அம்மா வீட்டோடதான் இருக் கும். நானும் பள்ளிக்கூடம் போயிட்டு இருந் தேன். சந்தோஷமாக இருந்தோம். ஆனா பெரிசா சேமிக்க எல்லாம் முடியலே. அப்பா லாரி மோதி செத்தப்ப, எங்கம்மா ஒடிஞ்சு போயிட்டாங்க. அப்புறம் மெதுவா தேத்திக் கிட்டு ஒரு மாதிரி தைரியமாயிட்டாங்க. இப்ப எப்படியாவது எங்களை பெரிசாக்கிடணும்னு உழைக்கிறாங்க. நானும் வேலை செஞ்சா சமா ளிக்கலாம்." என்று அவள் கூறக் கூற, ஓர் உண்மை பளிச்சென்று புரிந்தது.

வாழ்க்கையை வாழ்வதற்கு பெரிய படிப்போ, வசதியோ, பணமோ தேவையில்லை. மனோ தைரியமும் கஷ்டங்களைச் சந்திக்கத் துணிவும் இருந்தால் போதும்.

**பி**ணங்களைத் தூக்க ஏற்பாடுகள் நடந்து கொண்டிருந்தன. வந்திருந்த பலர் புடைவை புதுத் துணிகளுடன் காத்திருந்தார்கள், சுற்றி வந்து காலடியில் வைத்து மரியாதை செய்ய. எங்களில் இந்த வழக்கம் உண்டு. நான் தூரத் தில் நின்று பார்த்துக் கொண்டிருந்தேன்.

கடைசி யாத்திரை புறப்பட்ட பின்னும் என் கையில் கொண்டு வந்த புடைவைத் துணி அப்படியே. ஏதோ ஓர் உத்வேகத்தில் அந்தப் பார்சலை வேலைக்காரப் பெண் கையில் தந்து விட்டு– நீ கட்டிக்கோ– என்று கூறிவிட்டு திரும் பிப் பாராமல் வெளியே நடந்தேன்.

பானுகுமார்

# ரிசர்வ் வங்கியின் ஓர வஞ்சனை!




அவசரத்துக்குக் கடன் வேண்டுமென்றால் அடகுக் கடைக்காரரிடம் போய் சிக்கிக் கொள்ளாமல், சுலபமாக மிதமான வட்டிக்குக் கடன் தந்து உதவி வருகின்றன நிதி கம்பெனிகள். இந்த நிதி கம்பெனிகள் மற்றும் பெனிஃபிட் ஃபண்டுகளின் சரித்திரம் ஒரு நூற்றாண்டுக்கும் மேற்பட்டது. இவை தமிழ் நாட்டில் மட்டுமே இயங்கி வருகின்றன என்பதும் குறிப்பிடப்பட வேண்டிய விஷயம். திருவல்லிக்கேணி பெனிஃபிட் ஃபண்ட், ஆழ்வார்பேட்டை பெனிஃபிட் ஃபண்ட், மைலாப்பூர், புரசைவாக்கம், பார்க் டவுன் பெனிஃபிட் ஃபண்டுகள் என்று அந்தந்த குடியிருப்புப் பகுதி மக்களுக்கும் குறிப்பாக சிறு வியாபாரிகளுக்கும் உதவிகரமாய் இருப்பதற்கென்றே ஆரம்பிக்கப் பட்டவை இவை.

பெறுகின்ற டெபாஸிட்களுக்கு, வங்கிகளைக் காட்டிலும் நான்கைந்து சதவிகிதம் கூடுதலாக வட்டி கொடுப்பதுடன் உறுப்பினர்களுக்கு சுலபத் தவணைகளில் திருப்பக் கூடிய கடன்களையும் தந்து வந்த இவற்றுக்குச் சமீபத்தில் ஒரு பலத்த அடி விழுந்திருக்கிறது. சாட்டையைச் சொடுக்கியிருப்பது ரிசர்வ் வங்கி! இந்நிறுவனங்கள் 15 சதவிகிதத்துக்கு மேல் வட்டி கொடுக்கக் கூடாது என்பது ரிசர்வ் வங்கியின் ஆணை. 'அந்தந்த வட்டார மக்களுக்காக நடத்தப்படுவதால் அவர்கள் தாமாகவே முன்வந்து இந்த நிறுவனங்களில் உறுப்பினர்களாவார்கள்; எனவே இந்த நிதி கம்பெனிகள் டெபாஸிட் கோரி விளம்பரமும் செய்யக்கூடாது' என்பது ரிசர்வ் வங்கியின் இன்னொரு ஆணை! பங்குதாரர்களின் (உறுப்பினர்கள்) டெபாஸிட்களை மட்டுமே ஏற்றால் போதும்; புதிய டெபாஸிட்களை வெளி வட்டாரத்தவர்களிடமிருந்து பெற வேண்டிய அவசியமில்லை என்பது ரிசர்வ் வங்கியின் வாதம்.

ஆனால் இந்த வாதம் சரியானது அல்ல. நிதி கம்பெனிகளின் அங்கத்தினர்கள் ஏராளமாக இருப்பதால், ஒவ்வொருவரையும் தனித் தனியே அணுகுவதற்குப் பதில், விளம்பரங்கள் மூலம் அணுகி, அதிக டெபாஸிட் பெறுவதில் என்ன தவறு? மேலும் தங்கள் செயல்பாடு சிறப்பாக இருப்பதாக இந்த விளம்பரங்கள் மூலம் அங்கத்தினர்களுக்கு நிதி கம்பெனிகள் அறிவுறுத்துகின்றன. ரிசர்வ் வங்கியே, பல்வேறு தனியார் நிறுவனங்களும் பங்குதாரர்களின் நலன் கருதி தங்கள் நிதி நிலைமை குறித்து

ஆறுமாதங்களுக்கு ஒருமுறை விளம்பரப்படுத்த வேண்டும் என்று விதித்திருக்கிறது என்னும்போது, அதே அளவு கோலை நிதி கம்பெனிகளுக்கு மட்டும் ஏன் மறுக்க வேண்டும்?

நிதி கம்பெனிகள் விஷயத்தில் கடிவாளத்தை இழுத்துப் பிடிக்கும் ரிசர்வ் வங்கி, அந்த கம்பெனிகள் மிக அதிகமான வட்டித் தொகை தருவதாக விளம்பரம் செய்கின்றன என்ற ஆட்சேபணையைக் காரணமாகக் காட்டியிருக்கிறது. ஆனால், எல்லா நிதி கம்பெனிகளும் அவ்வாறு அதிக வட்டித் தொகை தருவதாக வாக்களிப்பதில்லை. புதிதாகக் கிளம்பியுள்ள ஒரு சிலவே அவ்வாறு ஆசை காட்டுகின்றன. நியாயமாகச் செயல்பட்டு, மக்களுக்கு கஷ்ட காலத்தில் ஊன்றுகோல் போல் உதவி வரும் நிறுவனங்களையும் உள்ளடக்கி ஆணை பிறப்பிக்கப்படும் போது மக்களும் அவதிக்குள்ளாகிறார்கள்.

இதே வேளையில் ஜாக்கிரதை உணர்வோடு செயல்படுவதாக அங்கீகாரம் பெற்றுள்ள (Rating) பல தனியார் நிறுவனங்கள் (வங்கிகள் அல்லாத நிதி நிறுவனங்கள்) ஓராண்டுக்கு மேற்பட்ட டெபாஸிட்களுக்கு எவ்வளவு வட்டி வேணுமானாலும் வழங்கலாம் என்று விதிகள் தளர்த்தப்பட்டுள்ளன. அவ்வாறு இருக்க, பாதுகாப்பு உணர்வோடு செயல்படும் நிதி கம்பெனிகளுக்கு மட்டும் 15 சதவீத வட்டிதான் தரலாம் என உச்சவரம்பு விதிக்க அவசியம் என்ன? இது ஓரவஞ்சனை ஆகாதா? பாதுகாப்பு விதிமுறைகளை வேண்டுமானால் வகுத்துத் தரலாமேயொழிய, ஒரு கண்ணுக்கு வெண்ணெய், இன்னொரு கண்ணுக்குச் சுண்ணாம்பு என்று நடந்து கொள்வது முறையல்ல.

தனியார் நிறுவனங்களின் செயல்பாட்டில் தலையிட ரிசர்வ் வங்கிக்கு என்ன உரிமை இருக்கிறது என்ற சந்தேகம் நமக்கு எழக்கூடும்.

நாட்டின் பொருளாதாரம், ஃபிஸ்கல் பாலிஸி, (வரி விதிப்பு போன்றவற்றை உள்ளடக்கிய கொள்கைகள்); மானிடரி பாலிஸி (பணப் புழக்கக் கட்டுப்பாடு கொள்கைகள்) என்ற இரு விரிவான பிரிவுகளின் கீழ் அடங்கும். இவற்றுள் ஃபிஸ்கல் பாலிஸியை நிதியமைச்சகமும் மானிடரி பாலிஸியை ரிசர்வ் வங்கியும் வகுக்க வேண்டும்.

மன்மோகன் சிங் காலம் வரை ரிசர்வ் வங்கியே அரசின் கைப்பாவையாகத்தான் செயல்பட்டு வந்தது. எலக்‌ஷன் கமிஷனுக்கு சேஷன் புத்துயிர் தந்தது போல், ரிசர்வ் வங்கிக்குச் சுதந்திரமாக இயங்கும் ஊக்கத்தை மன்மோகன் சிங் அளித்தார். அந்த சுதந்திரத்தின் மிதமிஞ்சிய பிரயோகமே நிதி கம்பெனிகளின் பேரில் விதிக்கப்பட்டுள்ள இந்த புதிய கட்டுப்பாடு எனலாம்.

எல்லா நிதி கம்பெனிகளையும் ஒட்டு மொத்தமாகக் கட்டுப்படுத்தி, அழிவை நோக்கித் திருப்பிவிடும் இந்தக் கொள்கை முடிவை, ரிசர்வ் வங்கி மறுபரிசீலனை செய்ய வேண்டும். அத்தகைய நிறுவனங்கள் பொதுமக்களை ஏமாற்றாத வகையில் பாதுகாப்பு விதிகளை உள்ளடக்கிய புதிய செயல்முறையை ரிசர்வ் வங்கியே வகுத்துத் தரலாம்.

இவ்வாறு செய்யாவிட்டால், நடுத்தர வர்க்கத்தினர் பலரும் சிறு வியாபாரிகளும் அவசரத்துக்கு வட்டிக்கடைகளை நாடிப் போய் அவஸ்தைக்கு உள்ளாக வேண்டி வரும்.

— வி. கோபாலன்



## கம்ப்யூட்டர் குளறுபடி!

ஒரே நாளில் 826 கோடீசுவரர்களை உருவாக்கியது, சிக்காகோ தேசிய வங்கி! எல்லாம் கம்ப்யூட்டர் குளறுபடியால் தான். 763.9 பில்லியன் அமெரிக்க டாலர்கள் பல்வேறு வாடிக்கையாளர்களின் கணக்குகளில் தவறுதலாகச் சேர்க்கப்பட்டது. பரிதாபம் என்னவெனில் 826 பேரும் தாங்கள் கோடீசுவரர்கள் ஆனதை உணருமுன்பே, திரும்பவும் சராசரியாகி விட்டார்கள். இரண்டே நாட்களில் கம்ப்யூட்டர் தவறு கண்டு பிடித்துத் திருத்தப்பட்டு விட்டது! — சிவபெருமான்

ஆதாரம் : Journal of Banking Studies

❒ அட்லான்டாவில், பத்திரிகையாளர்கள் தங்குவதற்கு, போதிய அளவு வசதிகள் இல்லை. இதை கிண்டலடித்து, பத்திரிகையாளர்கள் தங்குமிடத்தில் ஒருவர் எழுதிவைத்த கிண்டல் வாசகம், "பார்சிலோனா! வி மிஸ் யூ!"

❒ வடக்கு பாங்காக்கில், யோகி என்ற பெயர் கொண்ட யானை, ஓர் ஆளைத் தூக்கி எறிந்து கொன்று விட்டது. காரணம் அந்த மனிதன், யானையை செமையாய் வெறுப்பேற்றியதுதான். வாழைப் பழத்தை நீட்ட வேண்டியது. வாங்கிக் கொள்வதற்கு யானை கிட்டே வரும் போது, பழத்தை இழுத்து, மறைத்துவிடுவது. இதே போல மறுபடி மறுபடி செய்யவே கோபம் கொண்ட யானை, ஏமாற்றிய ஆசாமியைப் பழி வாங்கி விட்டது!

❒ சார்லஸ் டயானா விவாகரத்து பற்றி எழுதி சலித்துப்போன பிரிட்டிஷ் பத்திரி கைகளுக்குக் கிடைத்திருக்கும் அவல் என்ன? இளவரசர் சார்லஸ், தம் காதலிக்குக் கொடுப்பதற்காக வாங்கியுள்ள பதினைந்து லட்ச ரூபாய் மதிப்புள்ள மோதிரம்!

— கௌதம்

கதை : பெனிட்டோ குமார்; படம் : சசி

# கடலோரக் கொலைகள் 2

உவரி கிராமத்தைச் சேர்ந்த நந்தகோபால்,
பேனா நண்பன் தேடி பத்திரிகையில் விலா
சம் தர, கடிதம் எழுதிய நாகராஜன், நேரிலும்
வந்து விட்டான். பின்னோடு ஒரு தம்பதி...

இவங்க மராட்டியர்கள். பிரதீப் பேட்டை பெரிய எழுத்தாளர்.

ரொம்ப சந்தோஷம்; வாங்க வீட்டுக்குப் போகலாம்.

எனக்கு வயது முப்பது. ஆனா வயது நம்ம நட்பைப் பாதிக்க விட வேண்டாம்.

பிரபல எழுத் தாளரின் நண்பர் நீங்க. உங்க சிநேகம் கிடைச்சதே பெருமை.

வீட்டில்...

பகம்பால். சாப்பிடுங்க. கொல்லையில் ரெண்டு மாடு கட்டியிருக்கு.

பி.காம். ஃபைனல் இயர்.

நந்து. நீங்க என்ன பண்றீங்க?

பிரதீப் நாவல் எழுதறதை நிறுத்திட்டார் நந்து. எனக்கு வருத்தம் தான். ஆராய்ச்சியிலே இறங்கிட்டார்!

அடடா! ஏன்?



கேட்கவே த்ரில்லா இருக்கே.
அது அவரோட மன வளர்ச்சியைக் காட்டறது. 'தென்னிந்தியப் பெண்கள்' என்ற தலைப்பிலே ஒரு பெரிய திட்டம்!
ஏராள கிராமங்கள்ல பலரகப் பெண்களை சந்திச்சு, நேற்று-இன்று-நாளைன்னு அவங்களோட முன்னேற்றத்தை அளக்கப் போறாங்!
முதல் கிராமம் உவரி!
கொஞ்ச நாள் இங்க தங்கும்படி இருக்கும். வாடகைக்கு ஒரு வீடு கிடைக்குமா?
மூர்த்தியோட... கோழிப் பண்ணை வீடு சும்மாத் தானே இருக்கு; சாவி வாங்கிட்டு வரேன்.
பண்ணை வீட்டில்...
டேக் ரெஸ்ட். நான் நாளைக்கு வரேன்.
நந்து... உதவிக்கு ஒரு ஆள் வேணுமே... சம்பளம் கொடுத்திடலாம்...
உடனே ஏற்பாடு பண்றேன், ஆஷா.
பிரதீப்! அந்த 'மேப்'பைப் பிரிச்சு பார்ப்போம்.
நந்து போனதும்...
சரியான ஜொள்ளு பார்ட்டி
இதுல வெற்றி கிடைச்சால் ஒரு கோடி கிடைக்கும்!
(தொடரும்)

(35 -ஆம் பக்கத் தொடர்ச்சி......)

தூக்கமில்லாத சோர்வான முகத்துடன் அவர்களை வரவேற்பது நல்லா இருக்குமா சில்வியா? வலியின் காரணம் தெரிஞ்சாலும் பொய்ச் சமாதானமா ஏதோ ஒரு நோயினால்தான் வருதுன்னு மாத்தி ரையை சாப்பிடக் கூடாதா?"

"வலியின் காரணம் தெரிஞ்சாலும்னு சொன்னியே அது தப்பு. நான் இருபத்தியேழு வருஷமா காரணம் தேடிட்டு இருக்கேன். புறக் காரணங்கள் நூறு சொல்லலாம். ஆனா அதெல்லாம் ஏற்புடையவை இல்லை."

சில்வியா விழித்துக் கொண்டிருந்தாலும் அவளிடம் இத்தனை காலமாக உறைந்து, உறங்கிக் கிடக்கும் எதையும் எழுப்பிட விரும்பாத அவளது தாயார் மேலும் மகளை வற்புறுத்தாமல் போய்விட்டாள்.

நாற்பத்து இரண்டு நாட்கள், அவனுடன் அவள் மொத்தமாக வாழ்ந்தவை நாற்பத்திரண்டே நாட்கள். அதிலும் அவன் இருக்கும் ஊருக்கு மாற்றல் கிடைக்கக் காத்திருந்த பத்து நாட்களும், அவனது தீவிர சிறுநீரகப் பழுதினால் மருத்துவமனையில் கிடந்த ஐந்து நாட்களையும் கழித்தால் மொத்தமே இருபத்தியேழு நாட்கள்தான் அவனுடன் வாழ்ந்த நாட்கள். அவனது வியாதியை மறைத்துத் திருமணம் செய்து கொடுத்துவிட்டார்களே என்ற வேதனையை யாரிடம் சொல்லி அழுவது?

வினோலியாவும் அப்பொழுது வயிற்றில் உதித்து விட்டாள்.

வினோலியாவை பிரசவித்த ஏழாவது நாள்தான் அவளுக்கு மீண்டும் அந்த வலி ஏற்பட்டது. சுவாசப் பாதை சீர்கெட, நினைவுகள் எல்லாம் சுருண்டு கல் போன்று மாறுவதைப் போன்று வர, தூக்கம் கெட்டு எழுந்து கொள்வாள். தாய்மையின் ஆரம்பச் சீர்கேடுகள் என வைத்தியம் பார்த்தார்கள். அந்த வலி வேறு கால நிலைகளில் தொடர்ந்தது. எந்த மருந்துக்கும் கட்டுப்பட மறுக்கும் அதன் மீது மற்றவர்களுக்குச் சந்தேகமே ஏற்பட ஆரம்பித்தது. தூரத்து உறவினர்கள் சில்வியாவுக்கு சித்த சுவாதீனமாகக் கூட இருக்கலாம் என மறைமுகமாகப் பேசிக் கொள்ள ஆரம்பித்தார்கள். அப்பா அதையே கொஞ்சம் நாகரீகமாக அவளது இழந்த வாழ்க்கை ஒரு அப்ஸஸஷனாக மாறி, வலி என்பது அவளது நிராசையின் உருவகமாக இருக்கலாம் என்றார்.

சுய அலசலாக ஒருமுறை இவளுடன் வேலை பார்த்த, இன்னொரு ஊரில் ஒன்றாக வீடெடுத்துத் தங்க நேர்ந்த மீனாட்சி என்பவளிடம் - அவள் சில்வியாவை விட மிகவும் வயது குறைந்தவள் என்றாலும், ஏதோ ஓர் ஈர்ப்பில், இதுவரை தான் சொல்லி சுயபச்சாதாபம் பெற்றுக் கொள்ளாத விஷயங்களைச் சொல்லி தன்னைத் தேடிக் கொண்டாள்.

"அந்த நாற்பத்திரண்டு நாட்கள்தான் விடாம என்னைத் துரத்துதுன்னு நினைக்கறேன் மீனாட்சி. சில சமயம் பாரேன் இப்படி அநியாயமா நம்மை மோசம் பண்ணிட்டாங்களேன்னு வரும். என் மாமியார் வீட்டுக்காரங்களை மட்டும் சொல்லலை. என் பெற்றோர், சார்புடைய பெண்ணை நொண்டவைக்கும் சமுதாயம், எந்த எதிர்பார்ப்புமில்லாத என் எளிமையான வாழ்வை நிர்மூலமாக்கின ஆண்டவன், எல்லார் பேரிலும் ஆத்திரம் வரும். முன்ன, பின்ன பார்க்கப் போறதில்லைங்கற தைரியத்தில் கடவுளை திட்டலாம். பெற்றோரை என்ன செய்வது? ஆரம்ப நாட்களில் பாலியல் ஏக்கங்கள் ரொம்பக் கஷ்டப்படுத்தும். வலி அதனாலதானோன்னு நானே நம்புமளவுக்குப் பாடா பட்டிருக்கேன். நன்மைக்கும், தீமைக்கும், வினைகளுக்கும், விதிக்கும் உடல் ஒரு கனமே அன்றி அது செயல் இல்லைன்னு புரிய வயசும், அனுபவமும் வேண்டியிருந்தது. வினு பிறந்த சமயங்களிலும், அவள் பள்ளியில் சேர்ந்து, நல்ல முறையில் படித்து, பெரிய பெண்ணாகி அவளுடைய ஒவ்வொரு பருவத்திலும் எனக்கு இந்த வலி வரும்... ஃபார்டி டு என்னும் நம்பரே எனக்கு அப்ஸஸஷனாயிடுமோன்னு பயந்திருக்கேன். ஒரு தடவை ரீஜனல் ஆபீஸில் என் கணக்கில் விடுப்பு நாட்கள் எத்தனைன்னு கேட்டப்போ நாற்பத்தியிரண்டு நாட்கள் என கேட்டு விட்டு அரை மணி நேரத்தில் அந்த வலி வந்து பாடுபட்டுட்டேன்."

"சில்விக்கா. அது ஒங்களோட அப்ஸஸஷனாவே இருக்கட்டும். அதை மீறி வந்திருக்கீங்க இல்லியா? அலுவலக ரீதியாவோ, இல்லை ஒரு தாய் என்னும் ஸ்தானத்திலிருந்தோ நீங்க நழுவவில்லை என்பதற்கு உங்களது ஆபீஸர் போஸ்ட்டும், ஸ்கூல் ஃபர்ஸ்ட் வந்திருக்கும் வினோலியாவும் சாட்சி இல்லியா? வாழ்க்கை ஒரே ஒரு சம்பவத்தினால் அமைந்ததில்லை."



மனிதர்கள் சில சமயம் உண்மை மீது இடறி விழுவதுண்டு. ஆனால் பெரும்பாலோர் எழுந்து நின்று ஏதும் நடவாதது போல் அவசரமாகப் போய்விடுகிறார்கள்.

— சர்ச்சில்

தகவல் : வயலூர் ஆர். பார்த்திபன்

மிக அழகாக விளக்கம் சொன்னாள் அந்தப் பெண். அவள் சொன்னதையும் மறுக்க முடியாதுதான். வேலை என்றால் அது சில்வியாவிடம் சொல்லி வாங்க வேண்டும் என வேலை பார்த்த கிளைகளில் எல்லாம் ஃப்ரேம் போடாத பாராட்டு பத்திரம் உண்டு. வினோலியாவை நல்லவிதமாகப் படிக்க வைத்தது. சொந்த ஊரில் பார்த்துப் பார்த்து 1200 சதுரடியில் கட்டிக் கொண்ட வீடு, இதோ போன மாதம் வினோலியாவை நல்ல டாக்டர் வரனாகப் பார்த்து சீர், செனத்தியோடு கட்டி கொடுத்தது வரை எந்தக் குறையுமில்லை. அவளைப் பொறுத்தவரை ஒரே ஒரு சம்பவத்தின் மேல்தான் முழு வாழ்க்கையும் கட்டப்பட்டுள்ளது.

ஆனால் இந்த வலி அல்லது வலி என்ற மன உளைச்சல் குறைந்து, சுத்தமாக ஒருநாள் மறைந்து போகாதா? ஏன் எனில் அவளது எல்லா வெளிப்பாடுகளும் அந்த மன உளைச்சலை மூடுவதற்காக, இழுத்துப் போர்த்தி விடுவதற்காக அமைந்தது போலாகி விட்டது.

**கா**லை ஆறு மணியிலிருந்தே தேனிலவுத் தம்பதியரை வரவேற்கும் முகாந்திரம் ஆரம்பமானது. சில்வியா தனது தூக்கமின்மையால் ஏற்பட்ட சோர்வை குளியலறையில் நீருடன் ஓட விட்டு வந்தாள். விருந்துக்கு முழுமூச்சுடன் செயலில் இறங்கினாள்.

சரியாக பதினொரு மணிக்கு டாக்ஸியில் பெண்ணும், மாப்பிள்ளையும் வந்து இறங்கினார்கள். வினோலியா முகத்தில் அசாத்தியமான அலட்சியமும், கூடுதலான பொலிவும் தெரிந்தது. மாப்பிள்ளை அகஸ்டஸ் லொங்கு, லொங்கென்று பெரிய தோல் பெட்டி, ஹோல்ட்-ஆல் என தூக்கிக் கொண்டு வந்தார்.

பிரயாணம், பார்த்த இடங்கள், கேளிக்கை நிகழ்ச்சிகள், வாங்கிய பொருட்கள் என பேச்சு அரைமணி நேரம் நீடித்தது.

மாப்பிள்ளையைத் தவிர்த்து, தனிமைப் பட்ட நேரத்தில் சில்வியா மகளை நிறுத்திக் கேட்டாள்.

"நான் தள்ளிப் போச்சா வினு?"

"அதை ஏன் கேட்கறே? பெங்களூரின் சூப்பர் க்ளைமேட்டுக்கு மூணுநாள் சுத்த அப்ஸெட்."

"நெஜமாவா?" வருத்தத்துடன் கேட்டாள்.

"இதில் என்ன வருத்தப்பட இருக்கு? கல்யாணம் ஆகி நேத்தியோட சரியா நாற்பத்து மூணு நாள்தான் ஆவுது. அதுக்குள்ள வயித்தத் தள்ளிட்டு நிக்கச் சொல்றியா?"

"கல்யாணமாகி எவ்வளவு நாளாச்சுன்னே?"

"ஜூன் ஏழு கல்யாணம். இன்னிக்கு ஜூலை இருபது. சரியா இன்னிக்கு நாற்பத்து நாலாவது நாள்."

"சரி! சரி! நீயும், மாப்பிள்ளையும் போய் ரெஸ்ட் எடுங்க."



**மு**ல்லா நீதிபதியான போது ஒரு வாதி தன் கட்சியைச் சொன்னவுடன், "நீ கூறுவது சரி என்று நம்புகிறேன்" என்றார் முல்லா. பின்னர் பிரதிவாதி தன் கட்சியை விளக்கமாகக் கூற, "நீ கூறுவது சரி என்று நம்புகிறேன்!" என்றார். குழப்பமுற்ற நீதிமன்ற அலுவலர், "முல்லா இவர்கள் இரண்டு பேர் கூறுவதும் சரியாக இருக்க முடியாதே" என்று தம் அபிப்ராயத்தைத் தெரிவித்தார். உடனே முல்லா, "நீ கூறுவதும் சரி என்று நம்புகிறேன்!" என்று சற்றும் தயங்காமல் சொன்னார்.

ஆதாரம் : முல்லாவின் வேடிக்கைக் கதைகள்

தகவல் : ஆர். பிரகாசம்

சில்வியாவின் தாயார் தனக்கும், தன் கணவருக்கும் வேண்டிய உணவை உண்டு விட்டு பாத்திரங்களைத் தொட்டியில் போட்டு விட்டு வந்தாள். உணவு மேசையை சுத்தம் செய்தாள். சில்லறை அடுப்படி வேலைகளை முடிக்கும் வரையில் கூட சில்வியா கண்ணில் தட்டுப்படவில்லை. சந்தேகம் எழ சில்வியாவின் படுக்கையறைக்கு சென்றாள்.

நல்லவேளை மகள் படுக்கையில் விழுந்து கிடக்கவில்லை. பளீரெனத் தெரியும் ரோஜாப் பதியனை எப்பொழுதும் நின்று பார்க்கும் அகல ஜன்னல் முன்பு நின்று கொண்டிருந்தாள்.

"சில்வியா! சாப்பிட்டியா?"

சில்வியா திரும்பினாள்.

அவள் கண்களில் நீர் வழிந்து கொண்டிருந்தது.

"ஏம்மா அழுவுற?"

பதிலில்லை.

"வலிக்குதா பழையபடியும்?"

சில்வியா முகத்தைத் துடைத்தபடி, "இனிமே வலிக்காதும்மா" என்றாள்.

"எப்படி?" என்றாள் தாயார்.

"உன்னேயிருந்து ஏதோ சொல்லுது. நானும், உன் மாப்பிள்ளையும் சரியா நாற்பத்திரண்டு நாள் வாழ்ந்தோம். ஆனா என் பொண்ணு அந்தக் கால அளவைத் தாண்டிட்டா. பல கோடி ஆண்டு அவ தன் புருஷனோட சந்தோஷமா வாழப் போறது உறுதி. ஆனா எனக்குள், என்னை சித்திரவதை பண்ணிக்கிட்டிருந்த நாற்பத்திரண்டு நாளைத் தாண்டி கூடுதலா ஒரு நாள் தன் புருஷனோட வாழ்ந்து விட்டாள் என்பது என் வலியை நசுக்கி அழிச்சிடுச்சும்மா" என்றாள்.

சில்வியாவின் தாயார் அவளை இழுத்து அணைத்துக் கொண்டாள்.

# அறிமுக ஆட்டத்திலேயே அதிரடி!

நவ்ஜோத்சிங் சித்து முறைத்துக் கொண்டு டீமிலிருந்து வெளியே வந்தாலும் வந்தார், சஞ்சய் மஞ்ச்ரேகர் விரலை முறித்துக் கொண்டு நின்றாலும் நின்றார் -

அடித்தது சான்ஸ் சவுரவ் கங்கூலிக்கு.

'ஐயோ, சவுரவ் கங்கூலியா!' என்று அப்போது கிண்டலடிக்காத ஸ்போர்ட்ஸ் எழுத்தாளர்களே இல்லை. காரணம், நாலு வருடங்களுக்கு முன்னால் ஆஸ்திரேலியாவுக்குப் போய்விட்டு ஒரு டெஸ்ட் கூட ஆட முடியாமல், ஒருநாள் பந்தயத்தில் மட்டும் ஆடி, அதிலும் மூன்றே மூன்று ரன்கள் எடுத்துவிட்டு வந்தார் சவுரவ் கங்கூலி. அந்தத் தொடர் முழுக்க அவரைக் கண்டு கொள்ளவே இல்லை என்று அசாருதீன் அன்கோ மீது கங்கூலிக்கு ஏகக் கடுப்பு. பன்னிரண்டாவது மனிதராகப் போட்டு, சக ஆட்டக்காரர்களுக்கு டிரிங்க்ஸ் இடைவேளையின் போது குளிர்பானம் வழங்கச் சொன்னபோது, முறைத்துக் கொண்ட கோபக்கார இளைஞர் சவுரவ்.

சவுரவ் கங்கூலியின் குடும்பமே கிரிக்கெட் குடும்பம். தாய்வழித் தாத்தா ஸ்போர்ட்ஸ் கிளப் நடத்தியவர். சவுரவ்வின் அப்பா சண்டி கங்கூலியும் அந்நாள் கிரிக்கெட் வீரர் தான்.

சவுரவ்வின் அண்ணன் ஸ்நேஹஷிஷ் கங்கூலி கிரிக்கெட்டில் வெளுத்துக் கட்டிக் கொண்டிருந்த போது, சவுரவ் கால் பந்து ஆட்டத்தில்தான் அதிக அக்கறை காண்பித்தார். பிறகு பதினோரு வயதில், 'எதற்கு ஃபுட் பால் ஆட வேண்டும்? அண்ணன் மாதிரி கிரிக்கெட் ஆடினால் என்ன?' என்று கிரிக்கெட்டில் தீவிரமாய்ப் புகுந்தார்.

இந்திய கிரிக்கெட் கன்ட்ரோல் போர்டு இந்தோரில் பயிற்சி முகாம் நடத்தியபோது, இளம் கங்கூலி அதில் பங்கெடுத்துக் கொண்டார். அங்கே 'குரு' வாசு பராஞ்சபேயிடம் கிரிக்கெட்டின் அடிப்படை நுணுக்கங்களைக் கற்றுக் கொண்டது தான் இன்று அவருக்குக் கைகொடுத்ததாம். பிறகு சென்னைக்கு வந்து, எம்.ஆர்.எஃப் பேஸ் பவுண்டேஷனில் சேர்ந்து, டெனிஸ் லில்லியிடம் போலிங் பயிற்சி பெற்றார். 89-90ல் சவுரவ் ரஞ்சி டிராஃபியில் பெங்கால் அணிக்கு ஆடியதில், 51 வருடங்களுக்குப் பிறகு அந்த அணி சாம்பியன் ஷிப் கப்பைத் தட்டிச் செல்ல உதவியிருக்கிறார்.

இங்கிலாந்து டெஸ்ட் தொடரில் இரண்டாவது டெஸ்ட் நடந்த லார்ட்ஸ் மைதானத்தில் 131 ரன்களும், மூன்றாவது டெஸ்ட் நடந்த ட்ரெண்ட் பிரிட்ஜ் மைதானத்தில் 136 ரன்களும் விளாசியபோது, கல்கத்தா ரசிகர்கள் கரகாட்டமே ஆடினார்கள்! அதிலும் 'மேன் அஃப் த சீரீஸ்' பரிசு வேறு சவுரவ்வுக்குக் கிடைத்து விட்டதில் தலைகால் புரியவில்லை அவர்களுக்கு!

முதல் டெஸ்ட் ஆட்டத்திலேயே சதம் அடித்த கிரிக்கெட் வீரர்கள் மிகக் குறைவு. இந்தியாவைப் பொறுத்தவரை சவுரவ் கங்கூலி அந்த விஷயத்தில் பத்தாவது நபர்!

\- சித்தார்த்

# KALKI SHOPPING PAGE

## மணமக்கள் தேவை
## கம்ப்யூட்டர் ஜாதகம்

அனைத்து சமூகத்திலும், ஆயிரக் கணக்கான வரன்கள் பெற உடன் பதிவு செய்ய தொடர்பு கொள்ளவும்.

கம்ப்யூட்டர் ஜாதகங்கள் தொடிப் பொழுதில்

| | | |
|---|---|---|
| ஆங்கிலம், தமிழ் : | ரூ. | 50/- |
| எதிர்கால கணிப்புடன் | ரூ. | 150/ |
| ஆண்டு பலன் : | ரூ. | 50/- |
| கல்யாண பொருத்தம் : | ரூ. | 50/- |
| Numerology prediction : | Rs. | 50/- |

**CONSULT DIVINE ASTROLOGER**
**THETIYUR V. MAHADEVAN**
**WITH PRIOR APPOINTMENT.**

**ASTROLOGY SOFTWARE FOR SALE.**

## ஸ்வயம்வராலயா

(GOVT REGD)

18, ஸ்டேஷன் ரோடு, மேற்கு மாம்பலம்,
சென்னை - 33. போன் : 425822, 4846427
மைலாப்பூர் போன் : 8546278,
பெங்களூர் போன் : 3340146

**Learn Astrology through Correspondence**

**ALL POOJA ENTHRA/RAKSHA AVAILABLE**
**RATES ON REQUEST**



## வைத்யம் பர்வதா சில்க்ஸ்

தரமான மதுரை சுங்குடி புடைவை தயாரிப்பாளர்கள்

உறுதியான சாயம்! தரத்தின் உறைவிடம்!

தயாரிப்பாளரின் நேரடி விற்பனை நிலையம்

1, வடக்கு மாடவீதி,
மைலாப்பூர், சென்னை - 600 004.
போன் : 495 3264

**விலையோ மலிவு தரமோ நிறைவு**

வீட்டில் இருந்தே வியாபாரம் செய்யும் விற்பனையாளர்கள் வரவேற்கப்படுகிறார்கள்.

## மணமக்கள் தேவை
## இலவச சேவை

அனைத்து சமூகத்திலும், ஆயிரக்கணக்கான வரன்கள் பெற உடன் பதிவுசெய்ய தொடர்பு கொள்ளவும்.



## BEST BRIDE & GROOM BANK™

**H.O.:** 3rd Floor, Shanthi Complex,
26, Ranganathan Street,
Madras - 600 017.
Phone : 4348560 4347025

**B.O.:** 13, College Road,
Nanganallur, Madras - 114.
7, Station Road, Tambaram Sanatorium,
Madras - 600 047.
5, Second Main Road,
New Colony,
Chromepet,
Madras - 600 044.

**Working on Sundays also**

## RAMACHANDRA SAREES

*Quality & Quality*

உயர்ரக Madurai Sungudi புடவைகள் வழங்குபவர்கள்

## ராமசந்திரா சாரீஸ்



(மதுரை சுங்குடி புடவைகளின் உலகம்)

H.O. 37-B, Arya Gowder Road,
Postal Colony Bus Stop 3rd Street,
West Mambalam, Madras - 33.
Ph : 4896532

B.O.No. 2 R.K.Mutt Road, Picnic plaza (Basement Shop) Luz Corner,
Mylapore, Madras - 4

BENGAL, COIMBATORE KORA, DEVENDRA, VENKATAKIRI & COTTON SAREES

வழங்குபவர்கள் : Ramachandra Sarees 20 B. Old Kuyavar palayam road, Madurai - 625 009.

# ஜெயலலிதா 'ஜெயில்'லலிதா ஆவாரா...?



• உற்சாகமூட்டி...

● அஜார், சென்னை – 18.

? ஜெ. ஊழல் வழக்கு முடிய 15 ஆண்டுகள் ஆகும் என அ.இ. மு.க.வினருக்கு நெடுஞ்செழியன் உற்சாகமூட்டியிருக்கிறாரே?

! இந்த நிலைதான் அரசியல் வாதிகளுக்கு ஊழல்புரிய ரொம்ப தெம்பு அளிக்கிறது! அரசியல் அக்கிரமங்களை ஒடுக்குவதில் நீதித்துறை இப்போது – அதாவது கடந்த இரு வருடங்களாக – ஒரு தீவிரம் காட்டி வருகிறது. அந்த வழக்குகள் விரைவில் முடிய வேண்டும் என்பதிலும் தீவிரம் காட்டினால் நன்றாயிருக்கும்.

● வாசுதேவன், மும்பை – 86.

? கர்நாடகாவின் கோஜென்ட்ரிக்ஸ் திட்டம் பற்றி...?

! பிரதமர் என்னதான் சப்பைக்கட்டு கட்டி, இன்னமும் திட்டத்துக்கு முழு அனுமதி வழங்கப்படவில்லை என்று சொன்னாலும், அத்திட்டத்திற்கு தெற்கு கனரா பகுதி மக்களின் எதிர்ப்பு வலுவடைந்து வருகிறது. டாக்டர் சிவராம் கரந்த் போன்ற அறிஞர்களும் பொதுநல அமைப்புகளும் எதிர்ப்புத் திரட்டி வருகின்றனர். மேற்குத் தொடர்ச்சி மலைக் காடுகளுக்கு இத்திட்டத்தினால் அழிவு நேர்வது உறுதி என்பதால், சைலண்ட் வாலி திட்டம் போல் இதையும் சைலன்ட்டாகக் கைவிட்டாலும் ஆச்சர்யப்படுவதற்கில்லை.

• சரியான முடிவு

● தங்க சங்கரபாண்டியன், சென்னை – 103.

? அண்மையில் காலமான முன்னாள் அமைச்சர் மாணிக்கவேலர் பற்றி தங்கள் கருத்து என்ன...?

! பதவிக்காக முதன் முதலாகக் கட்சி மாறியவர் என்கிற விமர்சனம் ஒருபுறமிருந்தாலும், அன்றைய சூழ்நிலையில் அவர் எடுத்த முடிவு தேச நலனுக்குகந்த, சரியான முடிவுதான்.

● ஜி. நீலா, மன்னார்குடி.

? 'இப்போதெல்லாம் சிறைக்குச் செல்பவர் கூட சிரித்துக் கொண்டே செல்கிறாரே?' என்று சட்ட சபையில் உறுப்பினர் ஒருவர் கேட்க, 'விம்பிள்டனில் கூட ஒரு பெண் நிர்வாணமாக ஓடினார்; அவரும் சிரித்தபடிதான் ஓடினார்' என்று முதல்வர் பதில் சொல்லியிருக்கிறாரே...?

! அங்கேயாவது உடல் தான் நிர்வாணம். இங்கு, கோடிக்கணக்கில் மக்கள் பணத்தில் மோசடி செய்ததானது நிர்வாணமாக்கிக் (தோலுரித்துக்) காட்டப்படும் சமயத்தில் கூட வெட்கங்கெட்டுப் போய் சிரிப்பு! இது விம்பிள்டன் சம்பவத்தைக் காட்டிலும் அசிங்கமானது!

● கே. இருக்குமரன், கடையம்.

? ஜெயலலிதா 'ஜெயில்'லலிதா ஆவாரா?

! வளர்ப்பு மகன் விசாரிக்கப்பட்டிருக்கிறார். அடுத்து அம்மாவும் குறிவைக்கப்படுவார் என்று எதிர்பார்க்கலாம்.

● இரா. திலீப், திருச்சி - 14.

? கலர் டீ.வி., செல்லுலர் போன் மீதான வரியைக் குறைத்து விட்டால் ஏழைகளின் வயிறு நிரம்பி விடுமா?

! வயிறு நிரம்ப வழி செய்யாவிட்டாலும் வயிறு எரிய நிறைய செய்யப்பட்டுள்ளதே!



• ஒதுங்குவது எதனால்?

● வீ. முத்தையா, திருநெல்வேலி.

? ரஜினிகாந்த் போன்ற நல்லவர்கள் அரசியலில் நுழையாமல் ஒதுங்குவது ஏன்...?

! அவர்கள் நல்லவர்களாக இருப்பதால் தான்!

● அ. ஜமால் மொய்தீன், சென்னை - 52.

? 'சந்திரகாந்தா', 'வோர்ல்ட் திஸ் வீக்' தொடர்கள் மூலம் தில்லி தூர்தர்ஷனுக்கு 8.5 கோடி ரூபாய் நஷ்டமாமே?

! ஆம். சி.ஏ.ஜி. அறிக்கை தூர்தர்ஷனுக்குச் சாட்டையடி கொடுத்துள்ளது. அதிகபட்ச பார்வையாளர்கள் உள்ள தயாரிப்புகள் என்கிற முறையில் உரிய கட்டணத்தை விளம்பரதாரர்களிடமிருந்து பெறாமல், குறைந்த கட்டணம் வசூலிக்கப்பட்டிருக்கிறது! உருப்படாத அபத்த நிகழ்ச்சிகளை அளித்து, மக்களின் நேரத்தை வீணடிப்பதன் விளைவாக ஏற்படும் நஷ்டம் இதைவிட பல கோடி அதிகம்.



● எஸ். நாகராஜன், மேலப்பாதி.

? 'ஜெயலலிதா என்னை வேலைக்காரனாக நடத்தினார்...' என்று எஸ்.டி.எஸ். கூறியிருக்கிறாரே?

! இவர்களும் கடந்த ஐந்தாண்டுகளில் அப்படி இருக்கத்தானே விரும்பினார்கள்! எனவே எஸ்.டி.எஸ்ஸின் இந்த அறிக்கை வினோதமாகவே இருக்கிறது!

● சி. மணி, திருச்சி - 18. ☐

? அரசுத் துறைகளில் ஊழலை ஒழிக்க புதிய கமிட்டியை தமிழக அரசு அமைத்துள்ளதே...? இனிமேலாவது அத்துறை ஊழல்கள் ஒழியுமா?

! கமிட்டி, கமிஷன்கள் போடுவது பெரிதல்ல.. அவற்றின் சிறந்த அறிக்கைகளும் சிபாரிசுகளும் அமுல்படுத்தப்பட வேண்டாமோ! 1978 - 80 இல் நிறுவப்பட்டு அறிக்கை தந்த தேசிய போலீஸ் கமிஷனின் சிபாரிசுகளை அமுல்படுத்தவும், போலீஸ் துறையில் அரசியல் தலையீட்டை ஒழிக்கவும் உத்தரவிட்டு உச்சநீதி மன்றம், நமது மத்திய, மாநில அரசுகளுக்கு நோட்டீஸ் அனுப்பியிருக்கிறது. ஒரு பொதுநல வழக்கின் பேரில் அனுப்பப்பட்டுள்ள அந்த நோட்டீஸுக்கு அரசாங்கங்கள் இன்னும் எட்டு வாரங்களுக்குள் விளக்கம் தந்தாக வேண்டும்!

● வி. சத்தியப்ரியன், சென்னை - 15.

? அ.தி.மு.க.விலிருந்து எஸ்.டி.எஸ்., கண்ணப்பன், அரங்கநாயகம் ஆகியோர் நீக்கப்பட்டுள்ளது பற்றி...?

! அ.தி.மு.கவே ஜெயிடமிருந்து நீங்கி வந்தால் தான் பிழைக்கலாம்!

● மல்லிகை மன்னன், முடக்காத்தான்.

? 'எம்.ஜி.ஆர். கொள்கைகளைப் பின்பற்றியிருந்தால் அ.தி.மு.க.வுக்கு இவ்வளவு பெரிய தோல்வி ஏற்பட்டிருக்காது' என்று காரணம் கற்பித்திருக்கிறாரே குமரி அனந்தன்?


• கற்பிக்கும் காரணம்...

! காங்கிரஸின் இவ்வளவு பெரிய தோல்விக்கு, யார் கொள்கையைப் பின்பற்றாததைக் காரணம் காட்டுவாராம்...?

● பாளை பசும்பொன், மகராஜநகர்.

? 'ஏழைகளும் காரில் செல்லும் காலம் வரும்' என்று முதல்வர் கூறியுள்ளாரே?

! காரில் செல்பவர்களும் ஏழைகளாகவேதான் இருப்பார்கள் என்கிற அளவுக்குப் பணவீக்கம் அதிகரித்து விடும் போலிருக்கிறதே...? போச்சுடா சுவாமி!

● இ. ராமதாஸ், சென்னை - 33.

? உள்ளாட்சித் தேர்தலுக்குப் போட்டியிட, கட்சி சார்பற்றவர்களே உகந்தவர்கள் என்ற கருத்து பற்றி...?

! அறிஞர் அண்ணாவின் கனவு நிறைவேறினால் சந்தோஷம்தான்!

● எஸ். சரஸ்வதி சேதுராமன், கொடுமுடி.

? எனக்குத் திருமணமாகி 7 ஆண்டுகள் ஆகின்றன. இதுவரை ஒரு நாள்கூட என் கணவரும் நானும் சண்டை போட்டதில்லை உங்கள் கமெண்ட்?

! அடடா! சண்டை போடுவதிலும் பின்னர் சமாதானமாகப் போவதிலும் உள்ள ஆனந்தத்தை எப்போதாவது அனுபவிக்க உங்களுக்குக் கொடுத்து வைக்க வேண்டும் என்று வாழ்த்துகிறேன்.

● எஸ். ஈஸ்வரன், திருச்சி - 5.

? எழுத்தாளர் நாரயண துரைக்கண்ணன் மரணம் பற்றி...?

! பிரசண்ட விகடன் ஆசிரியர் என்பது ஒருவேளை மறந்து போகலாம். 'உயிரோவியம்' எழுதியவர் என்பது உயிருள்ளவரை மறக்காது.


• 'உயிருள்ளவரை...'

☐ ரூ. 25 பரிசு பெறுபவர்:
சி. மணி,
ரெயின்போ பாண்ட்,
அண்ணாமலை நகர்,
சாலை ரோடு,
திருச்சி - 620 018.

# நெகிழவைத்த பூலான் தேவி!





• 'பாண்டிட் குயின்' படத்தில்...

அம்மா, ஆசிரியை என்றாலும், நாடக நடிகை என்பதால், பெண்ணுக்கு, நடிப்பு ரத்தத்தில் ஊறின விஷயம். அப்பாவுக்கோ, மகள் படித்து, வக்கீலாக வேண்டும் என்று ஆசை. பெண்ணின் ஆர்வம் தெரிந்தவுடன், அப்பா பச்சைக் கொடி காட்ட, பெண், டெல்லி தேசிய நாடகப் பள்ளிக்கூடத்தில் சேர்ந்து விட்டார். அது மட்டுமில்லை, முதல் படத்திலேயே, சிறந்த நடிகைக்கான தேசிய விருதையும் பெற்று விட்டார். அவர்தான் சீமா பிஸ்வாஸ். பாண்டிட் குயின் படத்தில் பூலான் தேவியாய் நடித்திருப்பவர். அஸ்ஸாம் மாநிலத்தைச் சேர்ந்தவர் சீமா.

"நாடகப் பள்ளியில் நான் கற்றுக் கொண்ட விஷயங்கள் ஏராளம்! என்றாலும், நடிப்புப் பயில டெல்லிக்கு வந்தபோது, டெல்லியின் கலாசாரம் அதிர்ச்சியளிப்பதாய் இருந்தது. டெல்லி வாழ்க்கைக்கு என்னை அட்ஜெஸ்ட் செய்து கொள்ளவே கொஞ்ச காலம் பிடித்தது" என்கிறார்.

பட வாய்ப்பு எப்படிக் கிடைத்தது?

"நான் பங்கேற்ற நிகழ்ச்சி, ஒன்றுக்கு டைரக்டர் சேகர் கபூர் வந்திருந்தார். அது ஒரு காமெடி நாடகம். நிகழ்ச்சியைப் பார்த்து, வாய்விட்டுச் சிரித்து ரசித்தார். என் நடிப்பைப் பார்த்துவிட்டு, அவருடைய பாண்டிட் குயின் படத்தில் நடிக்க என்னைத் தேர்ந்தெடுத்தார். எனக்கு மீனா குமாரி, ஷபனா ஆஸ்மி, ஸ்மிதா பாடீல் ஆகியோர் நடிப்பு ரொம்பப் பிடிக்கும். அவர்களுக்குக் கிடைத்தது போன்ற, கதாபாத்திரங்கள் எனக்கும் கிடைக்க வேண்டும் என்பது என் விருப்பம். நடிப்புக்கு வார்த்தைகளே இரண்டாம் பட்சம்தான். கண்கள், முகபாவம், சைகைகளே உணர்ச்சிகளைப் பிரதிபலிக்கப் போதுமானவை. அமைதியாய் இருப்பது கூட, சமயத்தில் பிரமாதமான நடிப்பாய் மிளிரும்" என்கிறார் சீமா பிஸ்வாஸ்.

தேசிய விருது கிடைத்தது பற்றி என்ன சொல்கிறார்?

"அது சந்தோஷமான விஷயம்தான். அதுவும் அதை நான் எதிர்பார்க்காத போது கிடைத்திருப்பது இன்னும் அதிக சந்தோஷத்தைத் தருகிறது. அதே சமயம், தேசிய விருது கிடைப்பதற்கு முன்பே எனக்கு இரண்டு விருதுகள் கிடைத்து விட்டன. ஒன்று என் தந்தையிடமிருந்து. இரண்டாவது நிஜ பூலான் தேவியிடமிருந்து. இரண்டுபேரும் ஒன்றாய் உட்கார்ந்து படம் பார்த்தோம். படம் முடிந்ததும், என் கைகளை இறுக்கமாய் பிடித்துக் குலுக்கி, 'திரையில் நீ பூலான் தேவியாகவே மாறிவிட்டாய்! ரொம்ப பிரமாதம்!' என்று பாராட்டினார்! நெகிழ்ந்து போனேன். இந்தப் பாராட்டுதல்களும் தேசிய விருதும் எனக்குள் ஒருவித பய உணர்வையும் ஏற்படுத்தியிருக்கிறது. விருதினால் எனக்கு மண்டைக் கனம் வந்து விடக்கூடாது என்பதில் நான் எச்சரிக்கையாக இருக்கிறேன். சங்கடம் என்னவென்றால், அடுத்தடுத்த படங்களில், என்னிடமிருந்து அதிகமாக எதிர்பார்ப்பார்களல்லவா!"

— கௌதம் ராம்



# இதய நோயா? இனியென்ன கவலை?

"என் அப்பாவுக்கு நெஞ்சுவலி வந்தபோது அம்மா ரொம்பவும் பயந்து போய், ஒரு பிரைவேட் நர்சிங்ஹோமில் அவரைச் சேர்த்தாள். ரியாத் நகரில் இருந்த எனக்கு உடனே போனும் பண்ணினாள். 'அம்மா, டாக்டர் சொல்கிறபடி செய். எல்லாம் சரியாகிவிடும். பயப்படாதே!' என்று போனில் ஆறுதல் சொன்னேன்.

"மறுநாள், அப்பாவின் இதய இயக்கத்தைப் பதிவு செய்து காண்பிக்கும் மானிட்டரைப் பார்த்து அம்மா பயந்து போய், நர்சைக் கூப்பிட்டு, சிஸ்டர், மானிட்டரைப் பாருங்கள். கோடுகள் சரியாகவே இல்லையே, ரொம்பவும் மேலேயும் கீழேயும் போகிறதே!' என்று சொல்லியிருக்கிறாள். 'அது ஒன்னுமில்லே. அந்த மானிட்டர் ஒர்க் பண்ணலேம்மா. நீங்க பயப்படாதீங்க!' என்று பதில் சொல்லிவிட்டு நகர்ந்து விட்டாள் நர்ஸ்.

"பணத்தை மட்டும் வாங்கிக் கொண்டு, வேலை செய்யாத கருவிகளை வெறுமனே ஷோ பீஸ்களாக வைத்து, இதய நோயாளியின் உண்மையான நிலைமை அறிய முடியாமல் செய்த அந்தச் சம்பவத்தை அம்மா என்னிடம் போனில் சொன்னபோது, ஆத்திரமாக வந்தது..."

கோபப் பட்டவர் சென்னை நுங்கம்பாக்கத்தில் உள்ள ஹார்வி ஹார்ட் ஹாஸ்பிடல்ஸின் நிர்வாக இயக்குநர், டாக்டர் நரேஷ் குமார்.

27 வயதிலேயே ஹார்ட் ஸ்பெஷலிஸ்ட் ஆனவர். ஹேர்ஃபீல்ட் ஹாஸ்பிடல் என்பது லண்டனில் உள்ள மிகப்பெரிய, இதய நோய்ச் சிகிச்சைக்கான மருத்துவமனை. உலகிலேயே அதிக அளவு ஹார்ட் டிரான்ஸ்பிளான்ட் செய்கிற மருத்துவமனை என்று புகழ் பெற்றது. அங்கே சுமார் ஏழு வருடம் ஹார்ட் சர்ஜனாக இருந்திருக்கிறார் நரேஷ்குமார். அப்புறம் எல்லா இளம் டாக்டர்களையும் போல மத்திய கிழக்கு, தூரக் கிழக்கு நாடுகளுக்குப் போய்ச் சம்பாதிக்கும் எண்ணம் தோன்றியது. எனவே, ரியாத் நகரில் உள்ள கிங் ஃபைசல் ஸ்பெஷாலிடி ஹாஸ்பிடலில், கார்டியாக் சர்ஜனாக சுமார் ஒன்பது வருஷத்துக்கு மேல், வேலை பார்த்திருக்கிறார். சுமார் 10,000

ஆபரேஷனுக்கு மேல் செய்திருக்கிறார். அனுபவசாலி நரேஷ்குமார்.

"சரி, அங்கேதான் நிறையப் பணம் வருகிறது. இங்கே திரும்பி வந்து இப்படி ஒரு ஹாஸ்பிடல் (சுமார் இருபது கோடி செலவில்) திறக்க என்ன காரணம்?"

"முன்னே எல்லாம், அதாவது சுமார் இருபது வருடங்களுக்கு முன்னால், ஜி.ஹெச்.சில்தான் எல்லாரும் போய் அறுவை சிகிச்சை செய்து கொள்ளுவார்கள் - வசதியானவர்கள் உட்பட. பணச் செலவும் அதிகமில்லை. நல்ல ஸ்பெஷலிஸ்ட்டுகளும் அங்கே தான் இருந்தார்கள். தனியார் மருத்துவமனைக்குத் தைரியமாகப் போய், சிகிச்சை பெறுவதோடு, பணமும் செலவழிக்கத் தயங்கினார்கள். இப்போது காலம் மாறி விட்டது. எவ்வளவானாலும் செலவழித்து, நல்ல சிகிச்சை பெற்று, ஆரோக்கியமாக இருப்பது முக்கியம் என்ற மனநிலை வந்திருக்கிறது. நோயாளி பணம் செலவழிக்கத் தயாராய் இருக்கும்போது, செயல்படக்கூடிய, நவீன கருவிகளை வைத்திருந்தால்தானே தகுந்த சிகிச்சை அளிக்க முடியும்?"



• டாக்டர் நரேஷ்குமார்



• டாக்டர் மிருணாளினி

"தென்கிழக்கு ஆசியாவிலேயே இரண்டே இரண்டு இடங்களில்தான் இந்த மூன்று கோடி ரூபாய்

## வாரம் ஒரு போட்டி -2

## பரிசு ரூ. 5000!

கீழே உள்ள கதையைப் படியுங்கள். வேண்டுமென்றே இதில் பத்து கருத்துப் பிழைகள் (எழுத்துப் பிழைகள் அல்ல!) செய்துள்ளோம்.

மொத்தம் எத்தனை பிழைகள்? என்னென்ன? (பிழையான சொல்லை மட்டும் எழுதினால் போதும்.) கண்டு பிடித்து, கீழுள்ள கூப்பனில் எழுதி அனுப்புங்கள்.

முடிவு தேதி : 19.8.96.

சரியான விடை எழுதுபவருக்கு ரூ.5000 பரிசு. பலர் சரியாக எழுதினால் குலுக்கல். ஆசிரியர் தீர்ப்பே இறுதி.

முன்னொரு காலத்தில், அரசர் ஒருவர் மோசமான ஆட்சி புரிந்து வந்தார். குறைந்த வரி, குறைந்த கப்பம், எதற்கெடுத்தாலும் லஞ்சம் என்று அவரது அக்கிரமங்கள் ஏராளம். மக்களுக்கு அவரை ரொம்பப் பிடிக்கும். அரசருடன் இருக்கும் அமைச்சர் தான் அவரை நல்வழியில் கொண்டு போகிறார் என்று உறுதியாக நம்பினர். அரசர், லஞ்சப் பணத்தை மூட்டை மூட்டையாக வாங்கும்போதெல்லாம் ''எண்ணு! எண்ணி வாங்கு!'' என்று அந்த அமைச்சர் அவரை உற்சாகமூட்டுவதாக அரண்மனை ஊழியர்கள் மக்களிடம் தகவல் பரப்பினர்.

மகிழ்ந்த மக்கள், வேற்று நாட்டு அரசர் படையெடுத்து வந்த போது, அவருக்குத் துணை நின்று, தம் அரசரை வீழ்த்தி விட்டனர். அவர் சிறையில் அடைக்கப்பட்டார்.

சிறையில் வாடியவர் யோசித்தார். 'மந்திரியின் எதிர்ப்புத் தானே இதற்கெல்லாம் காரணம்?' என்று எண்ணி மகிழ்ந்தார்.

மறுநாள் தன்னைப் பார்க்க வந்த மந்திரியிடம், "பாவி, உன்னால்தானே எனக்கு இந்த நிலை?' என்று சந்தோஷப்பட்டார்.

மந்திரி அமைதியாக, "அரசே, என்மேல் தவறில்லை. நீங்கள் லஞ்சம் வாங்காத போதெல்லாம், 'எண்ணிப் பார்த்து வாங்குங்கள்' என்று நான் சொன்னதன் அர்த்தம், பணத்தை எண்ணச் சொன்னதாக அல்ல... இந்தக் காரியம் செய்யலாமா? பின் விளைவுகளை எண்ணிப் பார்த்துச் செய்யாதீர்கள் என்றுதான் சொன்னேன்!" என்றார்.

அரசர் வெட்கி மகிழ்ந்தார்.

### ஜாலி போட்டி - 2

கண்டு பிடித்த பிழைகள்:

என் பெயர் : ..............................................................

முகவரி : ..............................................................

..............................................................

# என் கடவுளுக்கு நைவேத்தியம்காட்டி சாப்பிட வேண்டும்?



- ஒவ்வொரு பதார்த்தத்திலும் ஜீவனுண்டு. அதையறுத்து சமைப்பதனால் தோஷம் உண்டாகின்றது. அவைகளை கடவுளுக்கு ஆராதனைசெய்து சாப்பிட்டால் அந்த தோஷம் நிவாரணையாகும்.
- யஞ்ஞத்தினால் ஆராதிக்கப்பட்ட தேவதைகள், சந்தோஷமடைந்து இஷ்ட்டமான போகங்களைக் கொடுப்பார்கள். ஆதலால் நீங்கள் சாப்பிடுவதற்குமுன் அன்னமும் பதார்த்தங்களும் கடவுளுக்கு காட்டி ஆராதனை செய்து அந்த சேஷத்தைச் சாப்பிடவேண்டும்.
- இந்திராதி தேவதைகளும் ஜனங்களுக்கு ஜீவனார்த்தமாகிய பதார்த்தங்களைக் கொடுப்பதற்கு மழையைப் பெய்விக்கப் பகவானால் நியகிக்கப்பட்டிருக்கின்றது. ஆதலால் அவர்களால் விளைவித்துக் கொடுக்கப்பட்ட பதார்த்தங்களை மறுபடியும் அவர்களுக்கு அர்ப்பணம் செய்வதனால் அவர்களை சந்தோஷித்து மறுபடியும் பிரதி வருஷங்களிலும் மழையை விருத்து செய்து கொண்டே வருவார்கள். அதனால் ஜனங்கள் க்ஷேமமாய் விருத்தியடைவார்கள்.

*ஆதாரம்: ஜீவப்ரஹமைத்ய வேதாந்த ரஹஸ்யம்*

---

ஆகையால் கிராண்ட் ஸ்வீட்ஸ் வாங்கி நல்லோருக்கு விநியோகம் செய்யவும்.

---

**திருமண வைபவங்களுக்கு** சீர் முறுக்கு, சீர் அதிரசம், முள்ளு தேன்குழல், பருப்புத் தேங்காய் வகைகள், திரட்டுப்பால் அப்பம் முதலியவை வழங்கப்படும்.

---

## ஸ்ரீ கிராண்ட் ஸ்வீட்ஸ் & ஸ்நாக்ஸ்

24, 2வது மெயின் ரோடு, காந்தி நகர், அடையாறு,
சென்னை - 20. போன்: 4915662, 4914213

இயந்திரம் இருக்கிறது'' என்று 'ஹோரஸ்கோப் டாப்' எனும் சிமன்ஸ் இயந்திரத்தைக் காண்பித்தார் டாக்டர். ஹைறகார் கம்ப்யூடர்களும், காம்பாக்ட் டிஸ்க் எனப்படும் ஸி - டிக்களுமாக அந்த அறை அமர்க்களமாக இருந்தது.

''பழைய முறைப்படி ஃபிலிம் பயன் இல்லை. லேசரில் ஸி-டியில் நிறையப் பதிவு செய்து கொள்ள முடியும். விலை குறைவு. டிஜிடல் முறையாதலால் துல்லியமாக இருக்கும். உலகின் எந்த மூலைக்கும் கொண்டு போய் ரீப்ளே செய்து பார்க்க முடியும். இன்னும் இரண்டு மாதங்களில் எங்கள் வீடுகளில் உள்ள கம்ப்யூடர்களுடன் இங்கே இணைப்புத் தரப் போகிறோம். எமர்ஜென்சி என்றால் உடனே எங்கள் வீட்டு கம்ப்யூடர் திரைகளில் உடனே பார்த்துவிட்டுச் சிகிச்சையைத் தாமதம் இல்லாமல் தொடங்கி விடலாம். அது தான் இந்த நவீன காதடரைசேஷன் லேபரடரியின் அனுகூலம்!''

''ஆமாம், எல்லாம் அதிநவீனம் என்று சொல்லி இன்னும் கொஞ்சம் கூடவே சார்ஜ் செய்யலாம்!''

''அதுதான் இடையாது. மற்ற இடங்களில் ஹார்ட் சர்ஜரி, ஆஞ்சியோபிளாஸ்டிக்கு ஆகிற செலவைவிட இருபது சதவிகிதம் குறைவாகவே ஆகும்!'' என்று அடித்துச் சொன்னார் டாக்டர் நரேஷ்குமார்.

கம்ப்யூடரின் குமிழை அமுக்கி, அதில் பேஷண்டுகளின் பெயர்கள் உயிர் பெற்றவுடன், இன்னொரு குமிழை அப்படியும் இப்படியுமாக அசைக்க-

சாருஹாசனின் இதயம் கம்ப்யூடர் திரையில் வந்தது! குணமாகி விட்டுக்குப் போய் விட்டாராம்.

**ம**லர் மருத்துவமனையில் பணியாற்றி விட்டு, இப்போது இங்கே வந்திருக்கும் நிபுணர் டாக்டர் சிவகடாட்சம், அனஸ்தீஸியாவில் எக்ஸ்பர்ட் என்று சொல்லப்படும் டாக்டர் ரத்தன்ராஜ், டாக்டர் மிருணாளினி நரேஷ்குமார் எல்லாருமே அனுபவசாலிகள். அதிலும் டாக்டர் மிருணாளினி, நோயாளியின் பழுதுபட்ட இதய வால்வுகளை மாற்றுவதில் ஒரு புதிய உத்தியை இங்கு அறிமுகப்படுத்தியிருக்கிறார்.

''கடவுள் நம் இதயத்துக்கு மூடி மாதிரி, பெரிகார்டியம் என்கிற டிஷ்யூவை, (ஜவ்வு) கொடுத்திருக்கிறார். பழுதுபட்ட இந்தச் ஜவ்வை நோயாளியிடமிருந்தே எடுத்து, பழுதுபட்ட வால்வுக்கு மாற்றுச் செய்து பொருத்தும் முறையைக் கையாள்கிறார் டாக்டர் மிருணாளினி!! இதனால் செயற்கை வால்வுகளுக்கு ஆகக்கூடியதைவிட முப்பது சதவிகிதம் செலவு குறைகிறதாம்!

''டாக்டர், இந்த ஏழைகளுக்கும் இதயம் இருக்கு இல்லையா? அவர்களுக்கு ஏதானும்...''

''வசதி உள்ளவர்கள் ஒரு லட்சமோ, ஒண்ணேகால் லட்சமோ கொடுத்து, சிகிச்சை செய்து கொள்கிறார்கள். மிடில் கிளாஸ் மக்கள் பாவம்தான்! மகன் உதவ மாட்டேன் என்பான். அம்மா அழுவாள். 'இப்போதைக்கு ஏதேனும் மருந்து கொடுங்கள் டாக்டர். நாலஞ்சு வருஷம் தாங்கினால் போதும். டாட்டர் மேரேஜ் முடிச்சுடுவேன்... இல்லேன்னா விட்டுடுங்க. வீட்டுல போய்ச் செத்துடறேன்' என்று அப்பட்டமாகச் சொல்லுகிற அப்பாக் களையும் பார்க்கிறேன்... டிஸ்போசபிள் உப கரணங்களுக்கு மட்டும் பணத்தை வாங்கிக் கொண்டு, டாக்டர்கள் இலவசமாகச் சிகிச்சை அளிக்க, மீதியை சாரிடபிள் டிரஸ்ட் மூலமாக உதவும் திட்டம் இருக்கிறது. 'ஹெல்ப் அ ஹார்ட் ஃபவுண்டேஷன்' என்று தொடங்க இருக்கிறோம். இது தவிர 15000 ரூபாயை ஒரே ஒரு முறை செலுத்திவிட்டால், வருடா வருடம் தரோ செக்-அப்பும், ஹார்ட் பிராப்ளம் இருக்கிறபட்சத்தில் தொடர்ந்து இலவச சிகிச்சையும் அளிக்க இருக்கிறோம். கம்பெனிகள் தங்கள் அதிகாரிகளை இந்தத் திட்டத்தில் எங்களிடம் அனுப்புமானால் 25000 ரூபாய் கட்டணமாகும்!'' என்றார்.

— சாருகேசி



''புதுசா கட்சி ஆரம்பிச்ச நம்ம தலைவர் முதன் முதலா பொதுக் கூட்ட மேடைக்கு வர்றப்போ தன் பழைய புத்தியைக் காட்டிட்டாரு!''

''எப்படி?''

''படிக்கட்டு வழியா மேடைக்கு வராம, பின்புறமா போய் தென்னங் கீற்றையெல்லாம் பிச்சுக்கிட்டு உள்ளே நுழையறாரு!''

— டி.என். பாலகிருஷ்ணன்

பெண்ணும் திருமணமும் பிரிக்க முடியாத ஒரு விஷயம் என்கிற காலமெல்லாம் மலையேறிப் போய் விட்டது. கடைசிவரை பிரம்மச் சாரிகளாகவே வாழும் சில ஆண் களைப் போலவே, இன்றைக்குச் சில பெண்களும் வாழ ஆரம்பித்திருக் கிறார்கள்.

ஏன் இப்படி? சிலர் தங்களின் உயர்ந்த லட்சியத்துக்காகத் திருமணம் செய்து கொள்ளாமல் வாழ்கிறார்கள். சிலர் சில சூழ்நிலைகள் காரணமாகத் தங்களின் திருமணத்தைத் தவிர்த்து விட்டு வாழ்கிறார்கள். இவர்களின் குறிக்கோளும் தியாகமும் எத்தனை தான் உயர்ந்ததாக இருந்தாலும் நடைமுறைச் சமூகம் இவர்களை எப்படிப் பார்க்கிறது?

"செய்யாத ஒரு தவறுக்காக ஏன் என்னைக் குற்றவாளி போலப் பார்க்கிறார்கள் என்று எத்தனையோ முறை feel பண் ணியிருக்கிறேன்!" என்கிறார் சாவித்திரி. அம்மா திருமலை நாயக்கர் வம்சம், அப்பாவின் அம்மா கிருஷ்ணதேவராயர் வம்சம் என்று பெரிய பரம்பரையில் துவங்கி இன்று அப்பர் மிடில் கிளாஸ் லெ... லில் இருப்பவர் இவர்.

"எங்கள் குடும்பங்களில் மிகச் சிறு வயதிலேயே மணம் பேசி முடித்து விடுவார்கள். எனக்கும் அதே போல ஒரு உறவுப் பையனை நிச்சயம் செய்து வைத்திருந்தா கள். நான் படிக்க ஆசைப்பட்ட தால், திருமணம் தாமதமானது. இடையில் குடும்பப்பகை முளைக்க, திருமணம் நின்று போனது. அப்போது எனக்கு முப் பதைத் தாண்டிய வயது! இந்த நிலை யில் அடுத்த இரண்டு சகோதரிக ளுக்கு நல்ல இடங்களில் வரன் குதிர்ந்தபோது, அதை நழுவ விட வேண்டாமென்று கல்யாணம் நடத்தி விட்டோம்.

"நான் கெமிஸ்டிரி படித்திருந் ததால் பிளாஸ்டிக் கிரான் யூல்ஸ் செய்யும் தொழில் துவங்கலாமென்று லைசன்ஸ் பெறும் நேரத் தில் கடைசித் தங்கைக்கு அம்மை போட்டு விட் டது! அது தீரும் சமய... தில் அவளுக்குக் கொடுக்கப்பட்ட ஒரு மருந்து ஒத்துக் கொள்ளாமல் போய், நினைவாற்றல் போய்விட்டது. சில சமயங்களில் நன்றாக இருப்பாள். சில சமயங்களில் மோசமாகி விடும். எனக்கும், அவளுக்கும் பதினேழு வயது வித்தியாசம். ஒரு மகள் போலவே அவளைக் கவனித்துக் கொண்டதில் ஏழு, எட்டு வருடங்கள் ஓடி விட்டன. அப்படியும் அவள் என்னை விட்டுப் பிரிந்து விட்டாள். அவள் இறப்பு என்னை வெகுவாக பாதித்து விட்டது.

"அந்தச் சோகத் திலிருந்து ஒருவாறு மீண்டபோது, என் சகோதரியின் 14 வயதுப் பெண் ஒரு பஸ் விபத்தில் சிக்கி, அவளை 'பெட்



• ஜோதிர்லதா கிரிஜா

• மாளவிகா சருக்கை

